உ

ஸ்ரீராமஜெயம்

சக்ரவர்த்தித் திருமகன்

# ஸ்ரீ ராமர் பிள்ளைத்தமிழ்



நூலாசிரியர் :

ஸ்ரீ பிரஹ்மானந்த சுவாமிகள்





1971 இதன் விலை ரூ. 1–00

## சற்குருநாதன் துதி

சுருதிமுதற் பலகலையுந் தேடிக் காணு
சுரருடனே மூவர்களும் சொல்ல வொண்ணு
பரிதிமுதல் ஒளிக்கெல்லாம் ஒளியே யாகிப்
பராபரமாம் அத்தனைக்கும்பரமே யாகி
கருதியுணர் வாக்கின்பக் கடலே யாகி
கருதாதான் உருவாயென் கருத்தி னிற்கும்
அருளுருபொன்னம்பலம் அத்வைதனுவர்
ஆண்டுகொண்டவடிக்கமலம் அணைந்து வாழ்வாம்.

## பரமகுருநாதன் துதி

இருக்கொடு நான்கு மறைகளுக் கெட்டா
வின்பமா யிலங்குமெய் ஞான
அருக்கனய் அன்பர் அகத்திருள் அகற்றும்
அண்ணலே யகில நா யகனே
பரிக்குநின் னருளால் பவக்கடல் கடந்து
பாவியேன் உய்யுமா றிரங்கித்
திருக்களர் உறையும் செல்வமே விர
ஞானதே சிகசிகா மணியே. 1

ஏகமேநோக்கி யின்புற வறியா
தென்மனம் புலன்களில் மயங்கி
ஆகமே தானென் றகிலமே மெய்யென்
றலைந்திடா தடியனேற் கிரங்கி
மோகமே மாற்றி முற்றுணர் வளித்தாள்
முதல்வநற் றிருக்களர் அமுதே
நாகமே புகழும் நாதனே விர
ஞானதே சிகசிகா மணியே. 2

---

உ

ஸ்ரீராமஜெயம்

சக்ரவர்த்தித் திருமகன்

# ஸ்ரீ ராமர் பிள்ளைத்தமிழ்





நூலாசிரியர் :

ஸ்ரீ பிரஹ்மானந்த சுவாமிகள்



1971 இதன் விலை ரூ. 1—00

## முன்னுரை

பூமண்டலத்தில் தேவர்களும் மனிதர்களாக வர விரும்பும் பெருமை பெற்ற பரதகண்டத்தில் மக்களாகப் பிறந்தோர் அறம்பொருள் இன்பம் வீடென வழங்கும் புருடார்த்தவாயிலாக துன்பவொழிவும் இன்பப்பேறும் அடைய வேதசாத்திர புராணுதிகளில் நித்திய நைமித்ய பிராயச்சித்தாதி கர்மங்களும் கிருச்ரசாந்ராயணுதி தவங் களும் பஞ்சாட்சர அட்டாட்சராதி மந்திர செபங்களும் சீவகாருண்யம் ஈசுர பத்திபாசவைராக்யம் பிரமக்ஞானம் என்றும் சொல்லியிருக்கிருர்கள். ஆயினும் கலியுகத்தில் சீவகாருண்யமும் செபமும் தோத்திரமும் ஆகிய ஈசுவர பத்தியே எல்லோரும் செய்து எளிது பலன்பெற முடியும் என்பதால் பூர்வசென்ம வாசனையாலோ அல்லது வேறு என்ன புண்ணியத்தாலோ பாடல்பாடும் முறை தெரியாமலே பாட ஆரம்பித்தும் ஈசுர கிருபையாலும், நல்லோர்கள் கூட்டுறவாலும், திருவருள் வெண்பா வந்தாதி, திருவருள் அயோத்திமாலை, மருகல்மாலை, மருகலந்தாதி பாடிய வெனக்கு ஸ்ரீ ராமர் பிள்ளைத்தமிழ்பாட விருப்பமுண் டானது.

ஆனல் தகுந்த கல்வியாற்றல் இல்லாதவனுகிய அடியேன் சிறிதுயோசித்துத் தமிழ்த் தெய்வமாகிய சிங்கார வேலனைத் துதித்தால் அருள்புரிவான் எனும் ஆசையால் வெண்பாவந்தாதியைத் திருமால் மருகன் எனத்தொடங்கி அவனுடைய பேரருள் உண்டாகும் வண்ணம் எனது குறை நீங்க பலவிதமாகப் போற்றிவரும்போது 75 பாடலுக்கு "மேற்பாடிவரும் எனக்கு அவன் அருள் பிரகாசம் வீசத் தானே செங்கீரைப் பருவப்பாடல்," "திங்கள் கதிர்" என்னும் திருப்பாடல் உதயமாயிற்று. ஆயினும் எனக்களிப்பாய் சீராரு முத்தித்திரு என்று வெண்பாவந்தாதியை சம்பூரண மாக்கிய பின்னர் சிங்காரவேலவன் திருவருளின்றுணையி

ஞலும் பெரியோர்களது பெருந்துணையான ஆசீர்வாத பலத்தினலும் ஸ்ரீ ராகவனுக்குக் குழந்தைபாகிய என்மீது கருணைகூர்ந்த அவ்வெம்பிரான் நீயென்னைக் குழந்தை யாகப் பாவித்து ''பிள்ளைக்கவிபாடுவை'' யெனத்திருவுளத் திற்கருதி அந்தர்யாமி யாயதான் என் மனத்திலிருந்துத் தூண்டியதாலும் ஒருவாறு தேறியிந்தப் பிரபந்தத்தைப் பாடிமுடித்தேன். இதைக் கேட்டறிந்த பல பக்தர்களும் பல வித்துவான்களும் மகிழ்வுற்று தாம் மகிழ்வடைந்தது போல் பலரும்பாடி மகிழும்படி அச்சியற்றிக் கொடுக்க வேண்டும் என விருப்பம் தெரிவித்தார்கள்.

இந்த நற்செய்தியை ஸ்ரீரங்கம் திருவாளர் R. வேணு கோபால் ரெட்டியார் [அவர்கள் நமக்கு நண்பரும் பக்தரும் ஆவார்கள்] அவர்களிடம் தெரிவித்தவுடன் அவ்விதமே செய்வோம் என்றும் இந்நூலை அச்சுவாகன மேற்றும் திருப்பணியை மேற்கொண்டனர். அப்புண்ணிய சீலர் இம்மையின் இன்பமும் மறுமைப் பேறும் பெற்று மகிழும்படி யாகச் சக்கரவர்த்தித் திருமகனுகிய ஸ்ரீராமபிரானுடைய திருவருளை வேண்டிப் பிரார்த்திக்கின்றேன்.

## அவையடக்கம்

திருவருள் பொலியும் மேலோர் சிந்தையும் மறையும் தேடும்
அருவுருப் பெருமான் பிள்ளை யருந்தமிழ்க் கவியைச் சொல்லல்
உருவிலா மலடி மைந்தன் உலகாள்வ தொக்கு மேனும்
பொருவிலா விராமன் சீர்த்திப் புகன்றிடு முரத்தால் சொன்னேன்.

இப்படிக்கு
ஸ்ரீ பிரம்மானந்த சுவாமிகள்
வேணும் சற்குருநாதன் துணை.

சிவமயம்

## ஸ்ரீ இனையான்குடி வேதாந்த மடத்தின் குரு முதல்வர் ஸ்ரீலஸ்ரீ சிவானந்த ஞானதேசிக சுவாமியவர்கள் பாடிய

# சாற்றுக் கவிகள்

பொன்னம் பலகுருவால் பூரண போதமுற் றேன்
மன்னுபிர மானந்த மாதவத்தோன் — தன்னிகராம்
ராமன்பிள் ளைத்தமிழை நன்ருகப் பாடினனே
நாமனைவர் கற்றுணர நன்கு.

பன்னூல்கள் பார்த்துப் பழகிய மேதைகட்கே
யின்னூலி லின்பம் எளிதெய்தும் — நன்னூல்கள்
கற்றுத் துறைபோய காருண்ய சீலருளம்
குற்றங் கருதுமோ கூறு.

பாலோ டளாயநீர் பாலாக வேதோன்றும்
கோலம்வே றுகயார் கூறிடுவர் — நீலநிற
ராமன் சரிதமிதில் ராமரச மல்லாது
நாமென்ன கூறவுள நாடு.

---

ஓம் தத்சத் பரப்பிரஹ்மணே நம:

# K. முத்துவேல் முதலியார் அவர்கள் இயற்றிய

## சாற்றுக் கவிகள்

தங்கமயக் கதிரவனின் ஒளியின் வீச்சால்
தகதகென மிளிருமிந்தத் தரணி தன்னில்
பொங்குகின்ற நீர்வளத்தால் நிலவளத்தால்
பொன்சாலிக் கழனிகளால் பொலியச் சான்ருேர்.
சங்கத்தால் சமயநெறி காட்டும் அப்பர்
சம்பந்தர் பதிகத்தால் ஏற்றங் கொண்டும்
திங்களென உடுக்களிடைத் திகழா நின்ற
திருமருகல் எனும் பெயராம் பதியொன்றுண்டே. 1

சனகாதி நால்வருக்கும் உபதேசிக்கத்
தற்பரனே தன்னருளால் வந்ததேபோல்
முனம் செய்த நல்வினையாம் பிரம்மானந்த
முனிவனெனும் மூதறிஞன் இவ்வூர் சேர்ந்தே
அனவரதம் அடியார்க்கோர் அமுதளிக்கும்
அறவோர்கள் சிலபேர்க்குக் கல்விதந்து
தனதுமனம் நிலைபெறவே தனித்திருந்து
தவவாழ்வில் ஈடுபட்டுத் தகவுபெற்ருேன். 2

கல்வியென்ருல் ரசவாத வித்தையல்ல
கணப்போதில் மறையும் பொன் தேட்டமல்ல
வல்பிணியைப் போக்கு மருத்துவமுமல்ல
வழக்கறிஞர் பேசிவரும் வாதுமல்ல
மல்யுத்தப் போர்புரியும் வலியுமல்ல
மாதேவன் அனைத்துமிரும் ஆருனென்னும்
பல்சிவபேதத்தின் தத்துவத்தை
பளிச்செனவே விளக்கியிடும் பாடந் தானே. 3

இத்தனைக்கும் பழமைபெரும் இதிகாசத்தில்
இராமனவன் குழந்தையென யிருந்தபோதும்
பித்தனைப்போல் விளையாடித் திரிந்த போதும்
பிறர்வியக்க வீரனெனத் திகழ்ந்தபோதும்
தத்துவத்தைக் காட்டிவிட்டான் என விளக்கி
தானாய் பிள்ளைத்தமிழைச் செய்து தந்த
அத்தனெனும் அருளாளன் பிரம்மானந்த
ஆசானின் அடியிணையைப் போற்றி செய்வாம். 4

இந்நூலைப் படித்தவர்கள் படிக்கக் கேட்டோர்
இரவுபகல் அயராது மனனஞ் செய்தோர்
முந்நூலாய் கருத்தினிலே யிருத்திக் கொண்டு
முழுநேரம் பத்தியுடன் பரவினோர்கள்
கன்மங்கள் விளாம்பழத்தின் ஓட்டைப்போல
கடகடத்துப் பசையற்று விலகியோட
சன்மார்க்க நெறிபிறழா திருந்து நாளும்
சகத்தினிலே சவுக்கிய மாய்வாழ்வார் தாமே. 5

---




# சாற்றுக்கவிகள்

## திருவானைக்கா கலைவாணன் இயற்றியவை

### [அறுசீர் விருத்தம்]

பூவிரி கமலப் புத்தேள் புண்டரீ காட்ச னென்னும்
தேவினத் தலைவோர் இன்னும் தேடிநின் றிருக்க யாண்டும்
யாவினும் விபுவாய் மாந்தர் யாவரும் எளிதில் காணத்
தேவியும் தானும் கூடித் திருநடம் புரியும் நம்பன் 1

காலடி யவராய்த் தோன்றிக் காசினி மண்மீ தோரோர்
காலடி தோயச் சுற்றிக் கறங்கெனச் சுழலும் வாழ்வில்
காலடி வைப்போர் நல்ல கதிபெறச் செயவே பண்டு
காலடி யதனில் மக்கட் கணக்கிலோர் உயிராய்த் தோன்றி 2

மங்கிருள் மாயை சாம்ப மாநிலத் துயிரொன் றென்னும்
தங்களால் உணர்தற் கெட்டாத் தத்துவ மசியைக் கூறும்
சங்கராச் சார்ய னென்னும் சற்குரு பரனுய்த் தோன்றி
எங்கணும் தன்வாய்ச் சொல்லின் எதிரொலி முழங்க நின்றான் 3

பேயினைப் போலும் மாயப் பெருந்திரை கிழிய ஞான
வாயிலைத் திறந்து காட்ட வருமவன் அடியார் மிக்கக்
கோயிலூர் அதனில் தெய்வக் குரல்கொடுத் துலகைக் காக்கத்
தாயினுஞ் சிறந்த அன்புத் தபோதனர் வழியிற் போந்து 4

மருட்கையுற் றறிவு சாம்ப மானுடச் சாதி மீண்டும்
கருக்குழிக் காளாய் வீழ்ந்து கதியழிந் திடப்போங் காலம்
இருட்படல் விலக்கிக் காலை யெழுங்கதி ரவனே போலும்
அருட்பிரம்மானந் தப்பேர் அடிகளென் றெருவன் வந்தான். 5

தன்னை ஆழ்ந் துணர்ந்து பிரம்ம தத்துவ நிலையில் நின்று
இன்னலைச் சாடி வாழ்தற் கேற்றதொல் வழியைக் காட்டித்
தென்னக முழுதும் ஞானத் தென்றலாய் அறவோர் கூட்ட
மன்னனாய் உலாப்போந் திட்ட மாமுனி பிரமா னந்தன். 6

குருவடி வான சிக்கல் குமரனைப் போற்றி, மேலும்
மருகனின் இறையைப் பாடி மால்சிவ சக்திக் காய
திருவருள் மாலை கோத்துத் தீந்தமிழ்க் களித்து மேலும்
ஒருபெரும் நூலை நாட்டுக் குவப்புடன் உதவிப் போற்ற 7

நிராமய னான நித்த நிமலனை நிமிர்ந்த வேழ
மராமரத் தோடிலங்கை மன்னவன் மார்பும் கீண்டு
பராபரம் தானாய் நின்ற பச்சைமா மலைபோல் மேனி
இராமனைச் சேயாய்க் கண்ட இரசனையைத் தமிழ்நூ லாக்கி 8

மதலையில் சிவத்தைக் காணும் மரபினில் அயோத்தி வேந்தின்
புதல்வனாய்ப் பிறந்தின் னாட்டின் புண்ணிய நெறியை காத்தன்
றுதவிய கடவுள் பிள்ளை உயர்வினைக் கவியால் பாடும்
இதமுறு பிரமானந்தன் ஈடிலாப் புலவன் காணீர் ! 9

இன்னறுங் கவிக்கொத் தொன்றிங் கெய்திடு தமிழ்த்தாய் வாழ்க !
தன்னிக ரிலாத பிள்ளைத் தமிழ்பெறும் இராமன் வாழ்க !
சொன்னிலை கடந்த பண்டைச் சுருதியின் பொருளைக் காட்ட
முன்வரும் பிரம்மா னந்த முனிவரன் திருத்தாள் வாழ்க. 10

---

உ

ஓம் தத்சத் பரப்பிரஹ்மணே நம:

# சக்ரவர்த்தி திருமகன் (ஸ்ரீராமர்) பிள்ளைத்தமிழ்

## காப்பு

### விநாயகர் துதி

சீர்கொண்ட பிரணவப் பொருளாய் அரன்முதற்
சீவர்கட் கருளுமிறையை
சித்தியுடன் புத்திசேர்ந் தகமகிழ் விநாயகனை
செந்தமிழ்க் கும்பமுனிதன்
நீர்கொண்ட குண்டிகை கவிழ்த்தோட காவேரி
நீர்பாய இந்திரர்க்கும்
நித்தலும் பூசைசெய பத்தர்கட் கருள்வானை
நினைந்துருகிப் போற்றல் செய்வாம்
பார்கொண்ட நற்புகழ் படைத்துயிர்க் குயிராய்ப்
பராபரம தானபரமன்
பவசா கரந்தீர்க்கு மெய்யன்பர் உள்ளத்திற்
பற்றறப் பற்றும் ஒருவன்
தார்கொண்ட தேன்றுளவமார்பினன்! அபயமென
தந்திக்கு வீடளித்தோன்
தனித்துணரும்பேரின்பராகவனைப்போற்றவென்
தண்தமிழ்க் கவிதழையவே.

## 1. காப்புப் பருவம்

### சக்கரத் தாழ்வார்

1. பூமீதிற் பொன்னுழி யுன்னருள் பெற்றவர்கள்
போற்றநின் றரசுபுரிவோர்
பொருபகை யழித்திடுவர் பாவவினை வென்றிடுவர்
புன்றுயர் அகற்றவல் லோர்
நாமீதிற் போற்றநின் றிகபரமும் இன்பமுற
ஞானவீ டடைவர் அதனுல்
நலியதுருவாசரைத் தொடர்ந்தொளி மறைத்தவா
நாடியுனைப் போற்றுகின்றேன்
காமாதி தீர்த்துயிர்ப் பகையிருள் தொலைப்பவன்
காலமூன் றுளிருமொருவன்
கழல்சேர்ந்த மெய்யன்பர் துன்பந் துடைப்பவன்
கலர்கண்ணிற் காணவரியான்
மாமாயை லீலையாற் பிறந்தவுணர் பொன்றிட
வாழமெய் யன்பரெல்லாம்
மகிழ்ந்தருளும் ரகுராம வள்ளலை யன்புடன்
வந்துநீ காக்க வென்றே. 1

### சிவபெருமான்

2. கங்கைபிறை வேணியரன் சங்கரியோர் பாகனும்
காலனை யுதைத்த பெருமான்
காக்கவிட முண்டவன் நால்வர்தரு செந்தமிழ்க்
காவிற் களிக்குமொருவன்
செங்கையவன் மான்மழுவை யேந்துவோன் சுடலையினும்
தில்லையினும் ஆடுமரசன்
தெய்வமணி முப்புரமுன் எரிசெய்த முதல்வனும்
சிவனடி வழுத்துகின்றேன்
தங்கமணி மேருவும் மந்தரமும் செல்வியிரு
தடமுலைகள் பாற்கடலதாம்
தார்மார் புழக்கநற வொழுகுறும் வாகைபுனை
தடப்புயத் திறைவன் றன்னை

புங்கவரைக் காப்பவனை பூமிதுயர் தீர்ப்பவனை
புகலிட மாகுமமுதைப்
பூரணனை என்னுயிரைக் காக்கவரும் ஈசனைப்
புரவலனைக் காக்கவென்றே. 2

உமா தேவியார்

3. அறிந்தமெஞ் ஞானியுள் ளறிவின்ப சத்தாகி
யறியார்க்குப் பந்தமாகி
அங்கயற் கண்ணியாய் இமவான் பெருஞ்செல்வி
அரனிடப் பாகமுடையாள்
செறிந்தபல அண்டமிசைத் தாயா முயிர்க்கெலாம்
தினம்பரவு வார்க்கருள்செய்
திரிபுரையைத் தேவர்தங் கற்பகக் கொடியினைத்
தேவமுதைப் போற்றுகின்றேன்
முறிந்தொழிய வெந்துயரம் முக்கரண மோய்ந்தினிய
மோனத்தில் விளையுமின்பை
முழுமுதலை மனவாக்குத் தட்டாத மெய்ப்பொருளை
முன்னிருந் தறிய வரியான்
பிறிந்திடாத் தனிமுதலைப் பேதையர் உணர்ந்திடாப்
பெருவெளியை யிகபரத்தை
பிறந்தினிது வாழ்விக்க வந்தரகு ராமனைப்
பேராள னைக்காக்கவே. 3

கற்பக விநாயகர்

4. நம்பன் மதக்களி றுயுல குய்ந்திட
ஞானப் பிடிதனைக் கூடிய ளித்திடும்
தம்ப மதக்களி றுன னன் ஐங்கரன்
தாரககற்பக நாயக னைத்தொழ
நம்பும் அடியவர் தாபமொ ழிப்பவன்
நாடு பொருள்தரு ஞானம ளிப்பவன்
இன்ப மளிப்பவன் ஏதும ளிப்பவன்
ஏகமளிப்பவன் ராமற் புரக்கவே. 4

## பிரஹ்ம தேவர்

5. அண்டம் படைத்தகில வுயிர்வகை படைத்தின்பம்
ஆய்ந்தடைய மறைகடந்தோய்
அமரர்க்கு மெய்ப்பொருட் கீதையுப தேசமதை
அருளால் உரைத்த வள்ளால்
புண்டரீ கத்திலுறை புனிதனே யன்னமிசைப்
போற்றுவார்க் கருளவருவோய்
பொய்யான விவ்வுலகை மெய்போல் அளித்தவுன்
பொன்னடிகள் போற்றுகின்றேன்
விண்டமுவு சோலைசூழ் முக்கனி பழுத்தொழுகி
வெள்ளந் திரண்டு பாய
விளைநெற் பசுங்கதிரை வாய்மடுத் தீர்ங்குவளை
மேய்ந்தெருமை நீந்திவருமோர்
தண்டலர் இலஞ்சியுள் கயல்தடவக் கன்றெனத்
தானெழுகு பாற்றேறல்பாய்
தண்வயல் அயோத்திநகர்ச் செல்வனென் னுயிராகும்
ஐயராம னைக்காக்கவே 5

## தேவேந்திரர்

6. தேவர்தந் தலைவனே யாயிரங் கண்ணனே
தெய்வானை யைப்பெற்றுமுன்
திருமுருக னுக்கீந்தோய்! கற்பக நிழல்வைகும்
தேவனே யுலகமூன்றும்
காவல்செய் தாளுமோர் வச்சிரப் படையினேய்
கடுந்தவத் தவரைமாற்றி
காதல்தீர் மெஞ்ஞானிக் கன்பனும் புரந்தரா
கருதியுனைப் போற்றுகின்றேன்
மூவர்தந் தலைவனும் இருவினைகள் அற்றவன்
முத்திக்கோர் வித்துமாவன்
முழுமுதல் இவன்செயல்கள் அறிவார்கள் இங்கில்லை
மோனத்தோர் அன்புதன்னால்

மேவுதற் கிடனுவன் உடல்வளர்த் தூர்திரிவர்
மேவுதற் கரியனுவன்
மெய்யன்பர் வலேதனிற் படுகின்ற ராகவனே
மெய்ப் பொருளே காக்கவென்றே. 6

திருமகள்

7. நட்பா யருண்முதிதை சற்குண முபேட்சையா
நல்வாச னேகள்பெற்ற
ஞானிகள் நெஞ்சதனிற் சுத்தசிற் கனமதாய்
நானென்ன மோனமுற்று
தட்பா நற் சச்சிதா னந்தமய மாய்நிதம்
தானுய் இனித்திருப்பான்
சதுர்மறைகள் காணவே நேதிநே தியெனுமோர்
தாசரதி யைக்காக்கவே
புட்பாச னத்தினில் விற்றிருந் தடிபரவும்
புண்ணியர்க் குன்றளருளால்
புவியினின் மனேமக்கள் பொன்புகழ் மறுமையிற்
புகுமுத்தி யுதவுதிருவே
கொட்பான நெஞ்சினிற் கூடா தகல்வைநீ
கூடினும் முள்ளினெரிபோற்
குறிகாட்டி மீன்வதினி மீளா தெனக்கருளக்
கோளறப் போற்றுகின்றேன். 7

கலேமகள்

8. விண்டுதரு மயனுவில் விற்றிருந் தருமறைகள்
விரித்தவுன் னடிகள்போற்றி
வேண்டுபுல வோரிதய தாமரையில் நவரசம்
விரியநற் கலேகடந்தாய்
கண்டமெய்ஞ் ஞானியுள் ளறிவாயெழுந்தருளிக்
கரையற்ற பேரின்பமாய்
கருதரிய முத்திதரு கலேவாணி யம்மையுன்
கழலினேப் போற்றுகின்றேன்

வண்டுகள் வைகரையிற் பொய்கைமலர்த் தேனுண்டு
மரமலர்த் தேனுச்சியில்
மாந்தியபின் மாலையின் மல்லிகைத் தேனுண்டு
மகிழ்ந்துதன் பெடையொடும்போய்
பண்டுநான் மறைபல விதங்கூறி யின்னமும்
பகர்ந்திடா தேங்குகின்ற
பரமனின் றயோத்திவந் தானெனப் புகழ்பாடு
பரந்தா மனைக்காக்கவே. 8

## சப்த மாதர்கள்

9. மறைப்பொரு ளுலகுய வுணர்வுற அருளினல்
வைத்தவ பிராமிதன்னை
மடிந்தெரி பொடிபட திரிபுர மதிலுமூ
வைத்திடு மகேஸ்வரியை
நிறைகடற் புகையெழ குனித்தவள் தனுசையே
நின்மல நராயணியை
நிலையெயி றுழுதெழ வரும்படி தருவதாய்
நின்றருளிர் வராகிதன்னை
உறைபடை குலிததின் மலைசிற கறுத்துவீ
றுற்றவிந் திராணி தன்னை
ஒழிந்திட கிரவுஞ்சம் அயில்விடும் வலியினள்
ஒண்பொருள் கௌமாரிதன்னை
கறைகொளுந் தலைகலங் கயிற்கொளு மிறைவிதாம்
கள்விய ருள்காளிதன்னை
கருத்தொரு மையதுறத் தொழுதனன் இறைவனும்
கண்ணன்ற னைக்காக்கவே. 9

## முப்பத்து முக்கோடி தேவர்கள்

10. எக்குணமும் எச்செயலும் எவ்வினையும் இல்லாத
இறைவனே யிந்தவுலகில்
எளியேங்கட் கண்காணத் திருவருள் சுரந்தவன்
எவ்வுயிரும் உய்வதற்குத்

தக்கவர்கள் நல்வினையும் தீயோர்கள் தீவினையும்
தானுற்ற வினையுடல்போல்
தன்மாயை யாற்றோன்றி யாடல்செய் ராகவனைச்
சற்குணனைக் காக்கவென்றே
சக்கரன் முதற்கதிர்கள் பன்னிருவர் ருத்திரர்
தசமேகர் வசுக்களெண்மர்
தமியோர்க்குத் திருவருள்செய் அஸ்வினி குமரருடன்
தாமிருவர் ஆகுமமரர்
ஒக்கவே முப்பத்து மும்மையவர் முக்கியர்
உலகிற்குப் பாலராவர்
ஊழிவரை யுயிர்காக்கும் உம்பர்காள் நும்சரணம்
உவக்கத் தலைக்கணிந்தேன். 10

---

## 2. செங்கீரைப் பருவம்

11. திங்கள்கதிர் விண்பவனம் அங்கிபுனன் மண்ணாகிச்
சீவனுடன் மூர்த்தமெட்டாய்
திக்கெட்டும் இருசெவிகள் மதிபருதி யிருகண்கள்
தீமுகமொ டுந்தி விண்ணாய்
துங்கநின் சேவடிகள் புவியாய் விராட்டெனத்
துலங்குநீ சாட்சியாகி
சொன்மனத் தெட்டாத சுத்தனீ சத்தியாற்
சூடுமெரி போலநின்றும்
எங்குநிறை முத்திநின தன்பருக் கீந்துமற்
றேனோர்க்குப் பந்தநல்கி
இரணிய கர்ப்பர் முதற் றம்பம்வரை யுள்ளிருந்
திதயத்தை யாட்டிவைப்போய்
செங்கண்மால் எங்கள்குல தெய்வமே யெம்பிரான்
செங்கீரை யாடியருளே
திமிரமல மகலவரு திருமருவு மார்பனே
செங்கீரை யாடியருளே. 1

12. இலகுதன் சத்தியின் முக்குணத் தியல்பினல்
ஈசனுயிர் செகமனைத்தாய்
இருவித மிந்தியம் பிராணுதி யோரைந்தும்
இதயமோ ரைந்துமாகி
விலகுமித் தூலவுடல் ஆருய் அவித்தையாய்
வியுமா பாசனுகி
விண்முதல் ஐந்துமாய் ஆபாச மாயையாய்
வேருன வையேழிதில்
அலகைபோல் நாலேழை நானென்றும் வேறென்றும்
அறியாமை யாட்டிவைக்கும்
ஐயேழு நியல்ல அறிவுநீ யென்றருள
அருட்குரவ ளுகவந்த
திலகமே யிரவிகுலம் உய்யவரும் அண்ணலே
செங்கீரை யாடியருளே
திமிரமல மகலவரு திருவுமருவு மார்பனே
செங்கீரை யாடியருளே. 2

13. அண்டங்கள் நின்னுளே பல்லாயி ரங்கோடி
அணுவென்ன நின்ருடவும்
ஆருயிர்கள் நின்னுடைய சன்னதியில் இருவினைக்
காடவும் அன்பரெல்லாம்
கொண்டமெய் யன்புருகிக் கூத்தாட வென்னுளே
கோபாதி துட்டர்ஓடக்
கூடாத தைக்கூட்டு மாயைநிலை யாடிடக்
கோளஞ்ஞன் ஓடநித்தம்
கண்டவைம் பொறிபுலன் கருதுமென் னெஞ்சமும்
கழல்சேர்ந் திளைப்பாறவும்
கலிசெயுந் தீதறக் கன்மவினை வாதறக்
கடையனேன் உய்யவருளால்
திண்டிறல் தோளனே செல்விமணா வாளனே
செங்கீரை யாடியருளே
திமிரமல மகலவரு திருமருவு மார்பனே
செங்கீரை யாடியருளே. 3

14. பூமகளு நிலமகளு மன்னவன் றசரதனும்
பூவைகோ சலையுமாட
பூரணியும் பரசிவனும் இந்திரனுந் தேவியும்
புங்கவர்க ளோடுமாட
நாமகளு நான்முகனு நாரதரும் தும்புருவும்
நற்றவர்க ளோடுமாட
நாவலரும் ஞானிகளு நங்கையரு நட்டமிட
நல்குமுன் னருளை நோக்கி
தாமரைக் கண்கள் இருகைமலர்த் தாளுந்தி
தவழதாழ் வடமுமாட
தானவரு மமர்களும் அமுதங் கடைந்தநாள்
தவழ்ந்தாடு மந்தரம்போல்
சேமகல் யாணகுண ! வெளியேனை யாளவே
செங்கீரை யாடியருளே
திமிரமல மகலவரு திருமருவு மார்பனே !
செங்கீரை யாடியருளே. 4

15. செல்விதிரு மார்புறையச் செங்கையில் ஐம்படையுன்
சேவடியில் கங்கைபுரளச்
சேடனுடல் நெளியஅரு தான்மறைகள் ஓலமிட
செவியிலிரு குழைகளாட
நல்வினைப் பேறுதரு மிருகர மலர்ப்புவியில்
நண்ணமுழந் தாளையூன்றி
நன்கெடுத் தோர்காலை மாவலிக் கருள்தரும்
நன்மையென வோங்குமழகோய் !
பல்விதப் பிறவியாங் கடல்விழுந் தின்னமும்
பாசம்போய் முத்திநெறியைப்
பற்றிலன் றிருவருள் நாட்டமும் பெற்றிலன்
பாவியேன் உய்வதற்கு
செல்வவுன தருள்பொழிவை யன்பருள வாலயா!
செங்கீரை யாடியருளே
திமிரமல மகலவரு திருமருவு மார்பனே !
செங்கீரை யாடியருளே, 5

16. விருப்பற்ற கன்மமும் உபாசனை விவேகமும்
விராகசட் சம்பத்தியும்
வியன்முமூட் சுத்வமும் சிரவணமும் மனனமும்
மேனிதித் யாசனமுமே
விருப்புற்ற தத்வமசி சோதனமும் சற்குருவின்
மெய்ஞ்ஞான வுபதேசமும்
விரித்தசா தனமிந்த பதினென்றும் பெற்றவர்கள்
வீடுபெற் றின்பமுறுவோர்
இருப்புற்ற ஞானம் பரோட்சம பரோட்சமாய்
இலகியோர் அதிடதிடமாய்
இருணீக்கி திடஞானம் வீடுதரு முத்திவரை
இதயத்தி லானந்தமாய்த்
திருப்புற்ற நெஞ்சினிற் குடிபுகுந் தெய்வமே !
செங்கீரை யாடியருளே
திமிரமல மகலவரு திருமருவு மார்பனே !
செங்கீரை யாடியருளே. 6.

17. இப்புவித் திரமென மெய்யுணர் வின்றியோர்
இன்பாய் எண்ணீதில்
ஏதஞ்செய் துயரத்தில் ஏழ்பிறப் பாற்றிற்போய்
என்றோ உய்வார்கள்
சொப்பனங் கயிற்றர விண்மலர் வந்திசேய்
சொல்லாம் பொய்க்கானல்
சோதித்தென் னுத்தியில் மாமறை யாய்ந்துமேல்
சுத்தா னந்தாக
ஒப்பருங் குருபரன் உலகி லளிப்பான்
உள்ளே மெய்ப்போதம்
ஓதரும் அறிவினை நானென்ன வானம்போல்
ஒன்றே யென்றோர்ந்து
செப்பரு மறைமொழி சிந்தையிற் றந்தவா
செங்கோ செங்கீரை
தீபமென் சிந்தையில் ஏற்றிவைத் தாண்டவா
செங்கோ செங்கீரை 7.

18. ஈச னவன்ஞானம் இச்சை முயற்சியூழ்
இத்தே சங்காலம்
ஏய்பி ரகபாவம் செய்யுந் தடையில்லா
இவ்வே தொன்பானில்
பேசுஞ் செயலாகுந் துக்க சுகமென்றே
பித்தாய் மங்காமல்
பேறும் அறிவாகி பந்தங் கடந்திட்டோர்
பின்போய்ப் பொன்றுமல்
பாசம் அழித்தோர்கள் உண்மைப் பதம்பெற்றோர்
பண்பாய் எந்நாளும்
பாவம் இருள்தீர உன்றன் செயலென்றே
பற்று நற்போதம்
தேசன் அரியணை செல்வ! தருவை நீ
செங்கோ செங்கீரை
தேவர்க்கரிதான தெய்வத் தினகரா!
செங்கோ செங்கீரை 8

19. துன்பந் துடைத்தருள் மெய்யன் பரைக்கண்டு
தூமலர் இட்டேத்தேன்
தூய மறைப்பொருள் உண்மை யறிகிலன்
தோலுழை விட்டீமீன்
இன்ப மென்றைம்பொறி யெண்ணி யழிந்ததை
ஏமமுற் றெண்ணேன்யான்
ஈச! வுனதடி யின்பம் அடைந்திடல்
ஏய்ங்கரை விட்டுடே
வன்பெருசுழலை யுற்ற தகவென
மாடியில் விட்டேனி
வாங்கு நிகர்வினை வந்து தடுத்திட
வாழறி வற்றேன்யான்
அன்புற் றுனதருள் தந்து கரையுற
ஆடுக செங்கீரை
ஆய! திருமகள் அன்புக் குகந்தவ!
ஆடுக செங்கீரை 9

20. நினைப்பவர்க் கென்றுந் தனதுரு வாவை
நெஞ்சா ரக்கூவி
நினையழைத் தன்பர்க் கருடரு ந் தூரம்
நின்பாற் சிந்தாகும்
உனைப்பரன் என்று நினைந்திலர் ஈனர்
உய்யார் எந்நாளும்
உனதருள் பெற்ற சமயங்கள் ஓதும்
ஒன்றே மெய்த்தேவென்
வினைப்பயன் உற்ற விதம்பல ரூபம்
விண்போல் என்றோர்தல்
விழியிலர் தொட்ட விதம்பல யானை
மெய்யே என்றோர்ந்தென்
சினப்பற வுண்மை யறிவுதந் தாள்வை
செங்கோ செங்கீரை
திருவருட் செல்வ! வெனதருள் நேய!
செங்கோ செங்கீரை 10

---

## 3. தாலப் பருவம்

21. பச்சைப் புரவி யேழுறுந் தேர்
பரவை வெதும்ப வரும்பகலோன்
பக்கம் வராது மணிக்கொடிகள்
பலமுன் றடுக்கும் சூழிகைசூழ்
பச்சை யொளிபோய் வான்யாறு
படவுஞ் சுரபி நாநீட்டும்
பலமா ளிகைசூழ் அயோத்தி நகர்
பரம பதமாய் அருள்சுரந்து
பச்சைப் புல்லும் விடுபெறும்
படிறன் அன்றே பிறந்திலனே
பாவமுற்ற கொடுங் கலியின்
பண்பை மாற்றி யாள்வாயோ

பச்சைத் திருமால் ! என்னுளஞ்சேர்
பரனே ! தாலோ தாலேலோ
பகலி ராவிற் றுரியமெனும்
பண்பா ! தாலோ தாலேலோ 1

22. பத்தாம் புருடன் றனையறியான்
பதிகன் உரைக்க வறிந்ததுபோல்
பவமாம் ஆற்றில் மானுடனும்
பாரம் சேர் ந்தேன் எனையறிய
பொத்தாந் தூலம் பிராணுதி
புலன்கள் பத்தும் அகக்கரணம்
பூதம் ஐந்தும் காமவினை
புருடன் பத்தாம் அவித்தையுடன்
சித்தாம் என்னைப் பரவெளியாய்
சீவன் உணர்வே பத்தென்னத்
தெளிந்து சித்தம் இளைப்பாறத்
தேவே ! வந்துன் அருள்புரிவாய்
நித்தா ! வமலா பரப்பிரம்மா
நிமலா ! தாலோ தாலேலோ
நீங்கா மெய்யன் பமளியிலே
நின்றாய் ! தாலோ தாலேலோ 2

23. மெய்யென் றறிந்த வுலகெல்லாம்
விழ்ந்து பணியும் தசரதன்றன்
மேலென் றுரைத்தாய் மாமலராள்
மெய்யாம் அறிவாம் என்னுருவில்
பொய்யென் றுலகை முயற்கொம்பாய்
புரியில் அரவாய்ப் பேய்த்தேராய்
பொன்னே பணிபோல் நீரலைபோல்
பொன்றுங் கனவாய் ஆய்ந்துணர் ந்து
மைதின் னிலைபோல் அல்லாமல்
மத்த யானை யுண்கரும்பாய்
வான்போல் அதுவே நானென்னும்
வள்ளற் சனகன் மேலென்ன

செய்ய *விளையோன் தீர்ப்புகந்த
தேவே! தாலோ தாலே லோ
தேன்மா மலராற் கட்டுண்டாய்ச்
செல்வா! தாலோ தாலே லோ 3

24. செல்வ! வுன்னைப் பெற்றபிதா
செம்பொன் மனைகள் திறந்துபறை
தெருவில் அறையக் கொள்வரின்றித்
தேடிக் கொண்ட விலைமாதர்
வெல்வர் வினையை முயற்சியர்போல்
விரும்பும் கொழுனர் உடன்வாழ்ந்தார்
மேகம் பெய்ய மும்மாரி
விலக்கார் கங்கை கடல்சேரும்
செல்வச் செருக்காற் பசுபட்சி
தின்றல் விலக்கார் உயிரனைத்தும்
செங்கோற் கிழாய் அறம்வழுவார்
திருவுற் றேங்க வுலகெல்லாம்
சொல்வர் உன்றன் திருநாமம்
துணைவா! தாலோ தாலே லோ
சோகமற்ற மெய்ப்பதமே!
சொரூபா! தாலோ தாலே லோ. 4

25. முன்னை வினைகள் மெய்யுணர்வால்
முறிந்து தூங்கும் நாளுளதோ
மோகத் தெழுந்த காமவெரி
முளைக்கா தொழியும் நாளுளதோ
அன்னை வயிறும் அயன்கரமும்
அயர்ந்து தூங்கும் நாளுளதோ
அழித்த காலன் கைப்பூமி
அனலற் றேயும் நாளுளதோ

* இளையோன்=இரவு திருப்பள்ளி அறையில் விநோத வாக்கு வாதத்தில் சீதாலட்சுமியும் நாராயணனுன ரகுநந்தரும் ஒருவரை யொருவர் வெற்றிகொள்ள முடியாமல் லட்சுமணரிடம் கூற நியாயம் வழங்கிய கதையாம்.

என்னை மறந்த பாவம்போய்
இரண்டற்றென்றும் நாளுளதோ
எளியேன் சொல்லும் பொருளாக
ஏற்றுக் காக்கும் நாளுளதோ
உன்னை யன்றிக் கதியில்லை
உயர்ந்தோய் ! தாலோ தாலே லோ
உணர்ந்தோர் உருவாம் எம்பெருமான் !
ஒளியே ! தாலோ தாலே லோ. 5

26. ஓதும் அளவை யாருலும்
உணர்தற் கரிய வுத்தமனே !
ஒளியோர் எட்டும் உன்னாலே
ஒளிர்வ தல்லால் உனையறியா
வாது செய்யும் பல்சமயர்
வழியில் நின்று வழக்கிடுவோர்
வாழ வூரைச் சேரார்போல்
வாழுங் கதிமேற் சென்றடையார்
ஆதி மூலம் என்றழைத்த
அன்றே யானைக் கருள்புரிந்தாய் !
ஐவர் தேவி கோவிந்தா !
அபயம் என்னத் துயிலளித்து
நீதி நிறுத்த வெழுந்தருளும்
நிறைவே ! தாலோ தாலே லோ
நினைப்பார் உறவே ! பன்பருளம்
நீங்காய் ! தாலோ தாலே லோ. 6

27. குணங்குறி தொழிற்குலம் இல்லவன் ! உளத்திருள்
கூற்றே ! தாலே லோ
கொற்றவ ! மதுரையிற் பட்டருக் கருள்செய்த
கோவே ! தாலே லோ
மணங்கமழ் துளவ ! மணிமுடிப் பெரும ! வென்
வாழ்வே ! தாலே லோ
மலையைக் குடையெடுத் தருள்வை திருமகள்
மார்பா ! தாலே லோ

வணங்குமெய் யடியவர் உளத்தில் உறுந்துயர்
மாற்ருய் ! தாலே லோ
வழியிற் பறித்த திருமங்கை யணர்கருள்
மாண்பே தாலே லோ
அணங்கென வந்தவள் தனமறுத் தவளைமுன்
ஆழ்வாய் தாலே லோ
அரக்கன் தலைபத்தும் அறுத்திவ் வுலகினை
ஆண்டாய் தாலே லோ. 7

28. உத்தமர்க் குயிர்த்துணை யாவாய் !
தாலோ தாலே லோ
உலகில் அருட்குரு வாவாய் !
தாலோ தாலே லோ
மத்திமர் தனையறி யார்தாம்
தாலோ தாலே லோ
மதித்துள் அறிபவர்க் கான்மா !
தாலோ தாலே லோ
புத்தமு தெனக்களித் தாள்வாய் !
தாலோ தாலே லோ
புன்றுயர் ஒளித்தருள் தேவே !
தாலோ தாலே லோ
அத்தமும் உதயமும் ஆகாய் !
தாலோ தாலே லோ
அண்டர்தம் தலைவ ! வென் ராமா
தாலோ தாலே லோ 8

29. உலகினில் உயிர்களின் இருவினை வழியினில்
உருற்றுமுன ரெழிலதிற் பாரோர் நோய்மீள
ஒருபொருள் உளத்தினில் உணர்ந்திட மறைபல
உணர்த்தியும் உணர்ந்திலர் தாமே மீளாமல்
உகந்திடு பொருள்பெற வருதொழில் பலவினில்
உறங்கிட வனிதையர் மாலாய் மாய்காமத்
துறங்கினர் சிலர்சிலர் சினமெனும் அனல்சுட
உறங்கினர் தபசெபத் தோர்போய் சீர்மேவ

பலகலை யுணர்ந்திடற் றொழிலென வுறங்கினர்
பலமதத் துறங்கினர் ஆய்ந்தார் நீணாளும்
பசுபதி வுலகென திரிவிதம் நிலையென
பகர்ந்தவர் உறங்கினர் தேனாய் நாணாளும்
பதியுரு பலவென பகையுற சமயிகள்
பகர்ந்திருள் உறங்கினர் வீண வாணாளை
பரனிலை யறிகிலர் உளதிலை யியல்பென
பழுதினில் உறங்கினர் தேரா ஊழாக
இலகுடற் பொறியுயிர் மனமதி சுகமென
இலதென வுறங்கினர் தானாய் ஆய்வானை
இயலுல கணுவென உயிர்பல நவவிதம்
எழுவிதம் பொருளென வாதால் வேறாக
இருள்மனத் துறங்கினர் புருடனை யசங்கமென்
றியைதமத் துறங்கினர் நேராய் நால்வேதம்
இறப்பது வடிவென வினையற வுடனிதம்
இருக்குமென் றுறங்கினர் மீளா வாழ்வாக.
நலமருள் கருமமென் றுறங்கினர் சிலருடல்
நலிவற வுறங்கினர் நானால் யோகாதில்
நயந்தருள் குருபரன் சரணென மறைப்பொருள்
நவின்றிட வுறங்கினர் விடே தாறைக
நனவினைக் கனவென அறிவினில் உறங்கிட
நனியருள் ரகுவர தாலோ தாலே லோ
நசையற நடுவுற நவமுற எனக்கினி
நயந்ருள்பு ரிந்திடத் தாலோ தாலே லோ. 9

30. உணர்வு தரும்புவி யுலகதில் எழுவிதம்
ஓர் நால் சாதனத்தோர்
உண்மைக் குருபெறற் சுபேச்சை சதாசரம்
உற்ற விசாரமதே
புணர்வு புலன்மனம் போந்தனு மாநசி
போதோர் தேசமுதல்
போன வரசென விறையுயிர்ப் பிறிவறற்
புகழ்சத் துவாபத்தி

அணவு சகமறல் ஐந்தசம் சத்தியாம்
அறிவோர் திரிபுடிபோய்
அழியா வின்பமாய் பதார்த்த மற்றதாம்
அற்றே வாசனைகள்
தணியு மனமுதல் அற்றது ரியமாம்
தாலோ தாலே லோ
தானுஞ் சிற்கன வமளியில் ரகுவரா
தாலோ தாலே லோ 10

---

## 4. சப்பாணிப் பருவம்

31. திரைகொண்டு நவமணிகள் தெள்ளிக் கொழிக்கின்ற
திண்கடல் சேர்ந்தநதிகள்
தெண்டிரை யாவதெனச் சொல்கின்ற பல்சமய
தெய்வங்கள் பலவாயினும்
உரைகொண்டு சொல்லரிய நெஞ்சால் நினைந்தரிய
ஒருவனே யுள்ளபொருளாய்
உணர்வுக்கு முணர்வாகி யுண்மைக்கு முண்மையாய்
ஒளியினுக் கொளியுமாகி
கரைகண்ட ஞானியர்க் குயிரா யிருப்பவன் !
காணார்க்கு வேறுபோலக்
காண்பான் ! பொருட்காட்சி யுருவமாய் நாமமாய்க்
காண்கின்ற சாட்சியாகி
தரைகொண்டு மூவடியை வானோர்க் களித்தவன் !
சப்பாணி கொட்டியருளே
தம்பமுதல் அயனுக்கும் உயிராகி நின்றவா
சப்பாணி கொட்டியருளே 1

32. பொங்குதேன் மலர்வெள்ளி வெற்பாலி னிலைவிட்டுப்
பூவுலகின் மனிதனைப்போல்
பொற்பதத் தகலிகை மீளமுனி வேள்வியைப்
புரந்திட வரக்கர்மாள

துங்கமறை தேடியுனைச் சொல்லாமற் சொல்லவும்
சோதியோர் எட்டுமானுய்
தோகைமயில் கார்கண்டு துணைவிமுன் ஆடிமகிழ்ச்
சோலைசூழ் அயோத்திநகரோய்
செங்கமல மேலன்னம் விளையாடு மிதுலைத்
திருச்சனக ன்பெற்றசெல்வி
திருக்கணும் அம்புவிட சிலையம்பு நோக்கிநீ
செல்லாது நின்ற செல்வா
சங்கரன் விற்பொடிசெய் தங்கையால் ராகவா
சப்பாணி கொட்டியருளே
தம்பமுதல் அயனுக்கும் உயிராகி நின்றவா
சப்பாணி கொட்டியருளே. 2

33. மக்களிற் ருேன்றினோர் செய்முறைகள் காட்டவே
மாகலைகள் கற்றபெருமான்!
மாதவ ரிடங்களுங் கங்கைமுதற் றீர்த்தமும்
மலையழகுந் தெய்வதளியும்
துக்கமற நீத்தவர் எனக்கண் டுகப்பநீ
துணைவருடன் ருதைமொழியால்
சுருதிகள் சொன்னபடி தீர்த்தங்கள் ஆடிவரச்
சுத்தமனத் தீர்த்தமுற்றே
புக்கிலிறப் புண்மையே பொய்யான விவ்வுலகம்
பொன்றுமெனுஞ் ஞானதீர்த்தம்
புகுந்தாடன் மனுடனுற் பெரும்பயன் ஆகுமெனப்
போதமா முனிவன்சொல்ல
தக்கமெய்ஞ் ஞானத்தைத் தந்துலகை யுய்விப்பை
சப்பாணி கொட்டியருளே
தம்பமுதல் அயனுக்கும் உயிராகி நின்றவா
சப்பாணி கொட்டியருளே. 3

34. செவியாதி யைந்தையும் மனத்துட னடக்கினும்
தேகமழி யாதவமுதம்
தினமுண்டு கற்பங்கள் தொறுமிருந் தட்டமா
சித்திகை வந்தபோதும்

புவியாதி யோர்கணத் துலவியர சாளினும்
புங்கவர்கள் ஏவல்செயினும்
பொருகின்ற சமயங்கள் பலவறிந் தோதினும்
பொன்றாத வாழ்வுமுண்டோ
குவியாத நெஞ்சினைக் கோற்காடு மந்திபோற்
குவியமெய் யுணர்வளித்தே
கூடியுலை யொன்றாக நாமவுரு பொய்யெனக்
குளிர்ந்திளைப் பாறநித்தம்
தவியாமல் உன்னருள் தந்தென்னை யாண்டவா
சப்பாணி கொட்டியருளே
தம்பமுதல் அயனுக்கும் உயிராகி நின்றவா
சப்பாணி கொட்டியருளே. 4

35. பாரதிற் றோன்றினன் பல்கலைகள் கற்றிலன்
பலர்க்குமுப காரியல்லேன்
பஞ்சமா பாதகம் பாவியேன் நெஞ்சினிற்
பற்றாது நீக்க கில்லேன்
சீரதில் நீத்திலன் இல்லறத் தானலன்
சிறந்தமெய்ஞ் ஞானியல்லேன்
தெய்வநீ ராடினேன் சேறுடுந் தன்மைபோற்
றிருவருட் டேடுநாயேன்
போரதிற் சாரதி யாய்விசயர்க் கருளிநீ
புலைக்கவி யரக்கனென்றாய்
புதல்வர்நந் தந்தைக்கு நால்வர்முன் னெழுவரெனும்
பொன்னரு ளெனக்கு மருளி
சாரதி யாயுயிர்கள் உள்ளத்தை யாட்டுவோய்
சப்பாணி கொட்டியருளே
தன்னையறிந் தின்புற்றோர் பேரின்ப வாழ்வுநீ
சப்பாணி கொட்டியருளே. 5

36. வாதம் விருத்திபரி ணாமமா ரம்பமாய்
வழுத்துவர் விவர்த்தமென்றெ
வாதுற்ற கியாதிகள் சத்தசத் தான்மவனிர்
வாச்சியம் அக்கனியமாய்

வேதம் விரித்ததை விசாரசா கரம்வே
தாந்தசூ டாமணியுமேல்
விருத்திப்ர பாகரம் பஞ்சதசி முதலாக
மெய்ப்பொரு ளுணர்த்தவறியார்
பேதஞ்செய் வாதியர் பின்னிட்டு நிற்கவும்
பிறப்பற்று முத்தி புகவும்
பிறிவுண்மை யில்லா விவர்த்தானிர் வாச்சியம்
பெறும்பட்ச மென்றுணர்த்தி
தாதன் எனும்புத்தி பொய்யென் றுணர்த்திநீ
சப்பாணி கொட்டியருளே
தன்னையறிந் தின்புற்றோர் பேரின்ப வாழ்வுநீ
சப்பாணி கொட்டியருளே. 6

37. கேட்டன் முதற்புலன் ஆஞ்சுகம் விடையமாங்
கேவலம் சுழுத்தியதில்
கிட்டுஞ் சுகமதே பிரம்ம சுகமதிற்
கிளர்வா சனைச் சுகமாம்
நாட்டமின் முக்கியம் நிசமான்ம வத்விதம்
ஞானச்சு கமென்றெட்டாம்
நவிலுவர் சோபாதி நிருபாதி கேவலம்
நண்ணுசு கம்மூன்றே
தேட்டமிற் பிரம்மா னந்தமொன் றேநீரிற்
தெரிபல தினகரன்போல்
தெளிந்தவர் நெஞ்சினில் ஒன்றென் றிளைப்பற
தெளிந்திலர் பலவென்பரால்
கூட்டமிற் பிரம்மா னந்தமே நீயென்று
குன்றமெடுத்துமுன் ஆனிரை காத்தவன்
கொட்டுக சப்பாணி 7

38. வாசமாஞ் சட்கோசம் அன்னமய மாகும்
மன்னுயிர்த் தொழிற்பொறியும்
வருபிரா ணமயன் ஞானேந் தியமனம்
மனோமய னுமதற்குள்

பாசமாம் புத்தியும் உணர்பொறி ஐந்துமே
பன்னுவிஞ் ஞானமயன்
பார்த்த லடைதலனு பவித்தலஞ் ஞானம்
பற்றுமா னந்தமயன்
நேசமாய் ஐங்கோசம் நானென்னும் புத்தியால்
நித்தம் பிறந்திறந்தே
நிங்காத துன்பத்தில் நாளுமுழன் றதை
நீக்கிமெய் யுணர்வளித்தே
கோசமோர் ஐந்துமே நீயல்ல வென்றுநீ
கொட்டுக சப்பாணி
கோதண்டக் கையனே யறிவின்ப சான்றெனக்
கொட்டுக சப்பாணி 8

39. தீதற்ற மெய்ப்பொருள் சிந்தையுட் காணவே
திசைமுகன் றந்தவுடல்
செகஞ் சுற்றியம்புலி மண்ணெடுத் தாய்ந்ததால்
சேர்புறக் காலன்விடான்
காதற்ற ஊசியும் கூடவரா தென்னும்
கருத்துண ரார் மூர்க்கர்
கருதரும் மாயையால் அனுமுதல் அண்டமோ
காட்டுதற் கனவெனலாம்
போதற்ற வோர்கோடி யயனுயுட் பெருகினும்
போயறி வாருண்டோ
புன்னுனி நீர் மின்னற் குமிழிபோன் மனுடனுற்
போயறிந் துய்வதுண்டோ
கோதற்ற நெஞ்சினின் மெய்ப்பொருள் அறியென
கொட்டுக சப்பாணி
குவலயா பீடத்தைக் கொம்பொசித்திட்டவா
கொட்டுக சப்பாணி 9

40. அரனயன் அமரர்தம் தலைவா! கொட்டுக சப்பாணி
அருமறை முடிதனில் அமர்ந்தோய்! கொட்டுக சப்பாணி
கரன்முதல் அசுரரை யழிப்போய்! கொட்டுக சப்பாணி
கருதுமெய் யடியவர்க் கெளியோம்! கொட்டுக சப்பாணி

பரனெனப் பணிபவர்க் கபயா! கொட்டுக சப்பாணி
பரபதம் உளத்துணர் வென்றவா! கொட்டுக சப்பாணி
வரன்வரி யன்வரிட்ட வின்பமே! கொட்டுக சப்பாணி
மகிழவந் தெனக்கருள் பெருமான்! கொட்டுக சப்பாணி 10

41. ஒருயெனை யறிவென யிறையெனக் கொட்டுக சப்பாணி
உளமதின் மயலற வுணரெனக் கொட்டுக சப்பாணி
இருவினை யுடறரு சகடெனக் கொட்டுக சப்பாணி
எமன்வர வுடல்கணம் இலதெனக் கொட்டுக சப்பாணி
திருவருள் பெறயெமன் கனவெனக் கொட்டுக சப்பாணி
திகழ்மறை யுரைத்திடற் பொருளெனக் கொட்டுக சப்பாணி
கருவினிற் றுயரறன் மகனெனக் கொட்டுக சப்பாணி
கருதுவர் பலனென ரகுவர கொட்டுக சப்பாணி. 11

---

## 5. முத்தப் பருவம்

42. பொன்னிவந் திருபுரமும் புடைசூழ பாற்கடற் –
போலரவு மதிலேழதாய்
பொழிலண்ட வரைமுட்டு திருவரங் கப்புனித!
போதயனை யுந்திபூத் தோய்
சென்னிதாழ்ந் தரனயன் தேவர்மற் றியாவருஞ்
சேவடிகள் போற்றிசெயவும்
திருமகளு னடிவருட வெழுவர்சா மரம்விச
திகழ்ஞானி நெஞ்சமுறைவோய்
தன்னைவே றென்றுருகித் தாள்போற்று மன்பரும்
சதுர்மறையுந் தேடிவாட
சடகோபன் திருவாயின் மொழிகேட்க பின்வருவை
தன்னுளத் தமைவு தோன்றாய்
மன்னர்வந் தடிதொழு மயோத்திநகர் செல்வனே
மலர்வாயின் முத்தமருளே
மாறுத பேரின்ப வாழ்வுநிதம் பொங்கவுன்
மலர்வாயின் முத்தமருளே. 1

43. வேய்கதலி கமுகிக்கு முதலைமீன் நந்திப்பி
மேகநெற் சங்குடும்பு
வேழங்கொம் பேனங்கொம் பாவின்பல் நாகமனர
விண்மதிபெண் கந்தரங்கொக்
காய்கதரு முத்தென்பர் அன்றியுஞ் சேய்மனைவி
ஆடலான் முத்தமென்பர்
அறிவிலார் ஆயாமற் பொருண்மாதர் சேயதனில்
ஆசையால் வந்தமுத்தம்
மாய்கதுயர் ஆய்ந்தோர்கள் முக்காலும் பொய்ப்பொருள்
வருந்துயர மென்றுநீத்தார்
வானுலகு மிவ்வுலகு மெவ்வுலகும் எக்காலும்
மதித்துணர்ந் தறிந்திடாவுன்
வாய்முத்தம் அளவில்லை விலையில்லை யெம்பிரான்
மலர்வாயின் முத்தமருளே
மாதவர்கள் ஏங்கமல ராள்சங்க முண்ணுமோர்
மலர்வாயின் முத்தமருளே. 2

44. சத்தியம தெக்காலும் அத்வைதப் பிரம்மமே
தனையறிந் தவர்க்குவடிவாம்
தற்பொரு ளறிந்திடவு மித்தையாம் விவகாரம்
தான்பிரம்ம ஞானமின்றி
பொய்த்திடும் பிராதிபா சிகமாகும் துச்சமோ
பொய்ம்மலடி மைந்தனுகும்
பூரண முணர்ந் தோர்க்குச் செகசீவ பரமூன்றும்
பொய்த்துச்ச விண்மலர்போல்
வித்தைபயில் வோர்க்குல காதியனிர் வாச்சியம்
மெய்யுணர் விலோர்க்குநித்தம்
மெய்க்குரு வளித்தவரு ளாற்பிரம் ந் தானய்
விளங்கசெக சீவபரமோர்
வத்துவாய்த் தோன்ருமற் கனவென் றுரைத்தவா
மலர்வாயின் முத்தமருளே
மாதவர்கள் ஏங்கமல ராள்சங்க முண்ணுமோர்
மலர்வாயின் முத்தமருளே. 3

45. அலைகடலிற் சோமுகனை மச்சமாய்ப் போயழித்
தயனுக் களித்து மறைகள்
அமிழவே மந்தரகிரி கூர்மமாய்த் தாங்கிநீ
யமரருக் கமுதளித்தாய்
நிலைகெடப் பொற்கணன் புவியைச் சுருட்டவே
நிருத்தினை வராகமாக
நிருசிங்கமாய்த்தூணில் இரணியன் உடல்கிழிய
நீபிரக லாதர்க்கருள்வை
சிலைமன்னர் இருபத்தொர் தலைமுறைத் தந்தைசொல
சிரமறுத் துனதுமழுவால்
சிந்ததலை பத்துடன் அரக்கனை யழித்துமுன்
சீதைசிறை மீட்டிவந்தாய்
மலைகடலிற் சேதுவாய் மாபாத கந்தீர்ப்பை
மலர்வாயின் முத்தமருளே
மாதவர்கள் ஏங்கமல ராள்சங்க முண்ணுமோர்
மலர்வாயின் முத்தமருளே. 4

46. உடற்றேன்று வரைத்துயர் வினையுள்ள வரையுடம்
புருற்றுவரை யூழு முண்டாம்
உகப்புவெறுப் புள்ளவரை தொழிலுண்டு வேறெனும்
உணர்வால் வெறுப்புகப்பாம்
அடற்றேன்றும் அறியாமை யுண்டெனிற் பேதமெனை
அறியும்வரை அஞ்ஞானமாம்
அகம்பிரம மென் றறியு வரையஞ்ஞன் உண்டென
அறிந்துணர் வசிட்டனுற்றுன்
தொடற்றேன்று மின்பமாம் நின்ருதை மேனல்வர்
தொடைமேலும் தோள்மேலுமாய்
தோய்ந்துபே ரின்பமுறல் கண்ணுற்ற மாதவன்
தோய்ந்திட நினைத்தல்கண்டு
மடற்றேன்று மயனரன் மால்சத்தி யுடனருளு
மலர்வாயின் முத்தமருளே
மாதவர்கள் ஏங்கமல ராள்சங்க முண்ணுமோர்
மலர்வாயின் முத்தமருளே. 5

[வேறு]

47. பனிவார் கடலின் றிரையென்ன
பாரிற் றேன்றுங் கானலென
பரமும் இகமும் ஆய்ந்தறிந்து
பற்றற் றுனது திருவருளால்
கனிவாய் மாஞர் இதழமுதம்
களித்துண் டேங்கல் போதுமென
காம தேனுங் கற்பகத்தும்
களித்த காலம் போதுமென
தனிவாழ் வுற்றுப் பகலிரவும்
தாஞ யிருக்கும் பரவடிவை
தளரா யோக மனத்தாலே
தாஞ யறிய அருள்புரிவாய்
முனிவோர் போற்றும் ரகுராம
முதல்வா முத்தம் தருகவே
முக்கா லத்தும் தனித்தொளிரும்
முகுந்தா முத்தம் தருகவே. 6

48. தேவே யுனது மலரடியைச்
சேர வொருகால் நினைந்தவரும்
செந்தா மரைசேர் தேனளிபோல்
தெளிந்த நெஞ்சின் மறவார்கள்
நாவே ஞென்றும் கூருமல்
நாடும் நெஞ்சம் உனையென்றும்
நல்லோர் கூட்டஞ் சேர்ந்தகலார்
நாளு மனமுள் அடங்கிவரும்
கோவே! யுன்றன் றிருவருளாற்
கூட மான மெய்ஞ்ஞானம்
குருவா யிருந்து நீதருவாய்
குற்ற மில்லா மெய்யுணர்வால்
மூவே டணை தீர்த் தருள்புரிவாய்
முதல்வா முத்தம் தருகவே
முக்கா லத்துந் தனித்தொளிரும்
முகுந்தா முத்தம் தருகவே. 7

49. உன்னைப் பணிந்த மாதவர்கள்
உருகித் தழுவ ஏங்கினரை
உடம்பை மலராள் ஒருத்தியன்றி
உலகிற் றழுவல் ஆகாதே
என்னைத் தழுவும் அன்புடையீர்
இடையர் குலத்திற் கோபியராய்
இருந்து யமுனு நதிக்கரையில்
இன்ப லீலே செய்துகந்து
தன்னை மறந்த பேரின்பாம்
தத்து வத்தை யடைந்திருப்பீர்
தவரு தென்ற பெருமானே
தமியேன் உய்யும் பொருட்டாக
முன்னை வினைகள் தீர்த்தருள
முதல்வா முத்தந் தருகவே
முக்கா லத்துந் தனித்தொளிரும்
முகுந்தா முத்தம் தருகவே. 8:

50. சீவர் உய்ய வான்மீகி
தேவர் புகழும் இதிகாசம்
தேவ வாணி தனிலளித்தும்
தெவிட்டா திந்தி மொழியதனில்
கூவத் துளசி தாசனெனக்
குவல யத்தே வந்துரைக்க
குறிப்பால் அவன்றன் கதையெழுதும்
கோவே யுன்றன் றிருக்கருத்தை
ஏவர் அறிவார் அன்பருக்காய்
இயற்றும் ஒன்றை யியற்ருமல்
இயற்ரு தொன்றை யியற்றிடினும்
இறைவா மாற்ற வல்லார் யார்
மூவர் உருவே ஒருருவாம்
முதல்வா முத்தம் தருகவே
முக்கா லத்தும் தனித்தொளிரும்
முகுந்தா முத்தம் தருகவே. 9

51. சுத்த வருளாம் சற்குணத்தைச்
சுரத்தால் தாளம் இராகமுடன்
தொழுது போற்ற வான்மீகித்
தோன்றுந் தியாகப் பிரம்மமென
சித்தி முத்தி வந்தசதா
சிவப்பி ரமேந்தி ரார்முதலோர்
செபித்துப் போற்றுந் திருநாமம்
திருவற் ருேர்கள் நினையார்கள்
நித்தம் என்றே யுலகெல்லாம்
நினைப்பர் தீய வினைசெய்தே
நிரய முற்ருேர் எமனுலகில்
நீங்கார் இதனை யறிந்தருளால்
முத்தர் போற்றும் முழுமுதலே
முதல்வா முத்தம் தருகவே
முக்கா லத்தும் தனித்தொளிரும்
முகுந்தா முத்தம் தருகவே. 10

---

## 6. வருகைப் பருவம்

52. மதிமுகத் தொளிநகை பரப்பநின் கண்மலர்
வான்கருணைத் தேன்பொழியவும்
மணிகளுன தரையினிற் கிண்கிணென பொற்கழல்
மறையொலி விளக்கிநிற்க
நிதிமுகத் தணிமார்பில் மாணிக்க நின்ருெளிர
நெற்றியிற் சுட்டியணிகள்
நிலவக் கருங்குழல் நீண்டலைய கங்கையுன்
நீள்பதத் துலவ நித்தம்
கதிர்விடச் சுடரெனக் காதிலிரு குண்டலம்
கருணையுளம் பொங்கிவழிய
கண்ணிமை யெனத்தம்பி ஒருமூவர் பின்வரக்
கைநீட்டி கோசலையுநின்
திதிமுகம் நோக்கியென் னய்யனே வருகவென்
ஸ்ரீராம நீவருகவே
தென்றலங் கன்றுலவு மன்றுடை யயோத்திபுரிச்
செல்வநா யகன்வருகவே. 1

53. அருவமாய் எள்ளுக்குள் எண்ணையும் பாலுக்குள்
அறியாத நெய்யுமெனவே
அறியாதிருந்திடினும் முக்கரண மொன்றுபட்
டன்பால் அழைப்பவர்க்கே
உருவமாய் வந்தருள்வ துண்மையே யாதலால்
உணர்விலா நாயினேனை
உய்விக்க வந்ததொரு முறையல்ல பன்முறையும்
உருவுகண் டருள்வதறியேன்
ஒருவனே பல்சமய தெய்வமாய் அந்தந்த
உலகா யுணர்ந்துகாண
உண்டில்லை யென்கின்ற வாதிகள் நெஞ்சயற
உருவாய் எனக்கு மொருநாள்
திருவருள் சுரந்திடக் கருணைபொழி மேகமே
சேய்க்கருள முன்வருகவே
தென்றலங் கன்றுலவு மன்றுடை யயோத்திபுரிச்
செல்வநா யகன்வருக வே 2

54. ஒருமனங் கொண்டுணர்ந் தடிபரவு நாரதர்
உத்தவர் முதலினோர்கள்
உறுதுணைப் பந்துவென அடிபரவு மெய்யன்பர்
உதிட்டிரர் முதலினோர்கள்
நிருமல மனத்தினற் கோபியர்கள் காதலாற்
நினைப்பரவு மெய்யன்பராம்
நெறிகெடப் பகைகொண்டு மிரணியன் முதலோர்கள்
நேர்வழியென் றுனையடைந்தார்
இருமனங் கொண்டலையு நாயினேன் இவ்வுலகில்
ஏரிநீர் கானலெனவே
இகழ்ந்துவெங் கானலைநன் நீரெனல் போலுனை
இகழ்ந்துவிடை யத்துழல்வதோ
திருமகளி னுடனருள வடியா ருளக்கோவில்
சென்றருட் பிரான் வருகவே
தென்றலங் கன்றுலவு மன்றுடை யயோத்திபுரிச்
செல்வநா யகன்வருகவே. 3

55. காமமுதற் பதின்மூவர் கள்வர் துயர் தீரவும்
கருத்தாய் உரைத்தமறைகள்
காணூர்கள் முப்பொருளை யுண்மையெனும் வாதியர்
கலகம் ஒழிந்தோயவும்
தாமமுதற் செய்மனச் சந்திரன் மழுங்கவும்
தாரகைப் புலனேயவும்
தன்னைவே றென்னுமதி யாங்கணிகை வெள்கிமேற்
சமாதியில் நின்றேயவும்
சாமமுதன் மறையெலாம் காவல்செய் தொழிலின்றி
சயனித் துறங்கநித்தம்
தானுன மெய்ப்பொருள் நானுகு முண்மையாந்
தகவுணர் வோங்கநித்தம்
சேமமுதல் ஐந்தொழிற் செய்துவிளை யாடுமொரு
சேவகப் பிரான்வருகவே
தென்றலங் கன்றுலவு மன்றுடை யயோத்திபுரிச்
செல்வநா யகன் வருகவே 4

56. மச்சமாய்க் கூர்மமாய் வராகநர சிங்கமாய்
வாமனப ரசுராமனுய்
வலியபல ராமகிட் ணன்கல்கி யாய்ப்பல
வடிவுகொண் டருளுமிறைவன் !
இச்சையற் றிவ்வுலகில் எழின்ஞானம் பெற்றிடுதல்
ஏழ்கடல் மூக்குநுனியால்
இறைத்திடுஞ் சிட்டொக்கு நின்மாயை வல்லபம்
எளியனுற் ருண்டவெளிதோ
விச்சைபகை யானகா மாதிகள் பதின்மூன்றும்
விலகாது நெஞ்சிலுள்ளார்
வெந்துயர வஞ்ஞுனே மூவரே காக்கினும்
விழ்த்துவேன் என்று நின்றான்
செச்சையணி வேணிய ! தினம்பரவு வார்க்கருள்ச்
சேவகப் பிரான் ! வருகவே
தென்றலங் கன்றுலவு மன்றுடை யயோத்திபுரிச்
செல்வநா யகன் ! வருகவே. 5

57. உள்ளத் தலர்சேர் ஓதிமமே!
உருகு மன்பர் உயிர்த்துணையே
உணர்ந்தோர் ஞானப் பழரசமே!
யோகத் தின்பப் பேரமுதே!
கொள்ளக் குறையாப் பெருநிதியே!
குறைவொன் றில்லாப் பெருவாழ்வே!
கூடப் பிறியாப் பெருங்கடலே!
குறிப்பால் உணரும் அரும்பொருளே!
தெள்ளத் தெளிந்தோர் மனத்தெளிவே!
தெவிட்டா வமுதத் தீஞ்சுவையே!
தேன்பால் சேர்முக் கனிரசமே!
தேடற் கரிதா மாமணியே!
வள்ளற் கரசே! யயோத்திபெறு
வாழ்வே! வருக வருகவே
மகிழும் பிரம்மா னந்தபெரு
வாழ்வே! வருக வருகவே. 6

58. அன்பே! வருக வெனையாளும்
அரசே! வருக விருவினைகள்
அழிப்பாய்! வருக எவ்வுயிர்க்கும்
அருள்வாய்! வருக வுன்னருளால்
என்பே ரிடும்பை யொழிப்பதற்கே
ஈசா! வருக அஞ்ஞான
இருளைக் கெடுக்கும் இளங்கதிராம்
எந்தாய்! வருக வென்பிறப்பாம்
துன்பே யொழித்து வழிகாட்டும்
துணையே! வருக நினைப்பரியத்
தூயா! வருக நினைப்பற்றோர்
சொருபா! வருக வைம்புலமார்
வன்பே கெடுக்கும் அயோத்தி பெறு
வாழ்வே! வருக வருகவே
மகிழும் பிரம்மா னந்தபெரு
வாழ்வே! வருக வருகவே. 7

59. நிதியே ! வருக வுயிர்க்கெலாம்
நெறியே ! வருக பேரின்ப
நிலையே ! வருக வொப்பற்ற
நெடுமால் ! வருக திக்கற்றோர்
கதியே ! வருக மெய்யன்பர்
கருத்தே ! வருக அருள்மேகக்
கருவே ! வருக காத்தருளக்
கண்ணா ! வருக அரனயன்மால்
விதியே ! வருக என்றுமுள்ள
விபுவே ! வருக வேதத்தின்
வித்தே ! வருக மாதவத்தின்
விளைவே ! வருக ஏழையனேன்
மதியே ! வருக அயோத்தி பெறு
வாழ்வே ! வருக வருகவே
மகிழும் பிரம்மா னந்தபெரு
வாழ்வே ! வருக வருகவே. 8

60. மலரின் மருவே ! மணியின் ஒளியே !
மதியின் உணர்வே ! வருகவே
வளியின் அசைவே ! வெளியின் இடமே !
வலியின் அனலே ! வருகவே
சலமுள் நெகிழ்வே ! தரையின் திறமே !
சரணம் கதியே ! வருகவே
தனியத் துயர்போய்ப் பிறவி யருளாற்
றவிர்க்கும் அரசே ! வருகவே
மலமொ டுவிட்சே பமறைப் பழித்தோர்
மனத்தி லொளிர்வோய் ! வருகவே
மனத்தை யிடமாய் அளித்த பெரியோர்
மகிழத் துயில்வோய் ! வருகவே
அலரின் மகளால் அணையும் ஒருவா !
அமரர் கதியே ! வருகவே
அபயம் எனையாள் அருளும் இறைவா !
அருவன் உருவாய் வருகவே. 9

61. நினைவே யுலகாய் நிகழும் இதையே
நிலையாய்ப் புகழ்வ சமயமாம்
நிறைவாய்ச் சுகமாய்ச் சுழுத்தி தனிலே
நிலையா தறிந்தும் அறிந்திலார்
உனைவே றெனவே யெமனும் பயமும்
உனக்கே யெனும றையறியார்
உலகாய் உயிராய் சிவமும் பிறிவாய்
உணர்வார் கடைஞர் நெல்முதலாந்
தனைவே றறியார் செழுநெற் கரும்பாய்
தனுவாங் கரும்பைக் கமுகென்றே
தளிர்த்தார் கமுகே பெருந்தெங் கெனல்போல்
சலதீஇ முழுகி மயலதாய்
நினைவே றென்றோர் உறுதி யறியார்
நெறியாந் தலைவ ! வருகவே
நினைத்த வடிவாம் கிருமி யெனவே
நினைப்பார்க் கருள்வை ! வருகவே. 10

---

## 7. அம்புலிப் பருவம்

62. வாரணம் பொங்கவெழு வாயிறைவன் அன்பரின்
மனம்பொங்க வெழுவனுன்னை
மலர்கண்டு குவியுமேற் செல்விமுதல் அன்பர்கர
மலர்குவிந் தொடுங்கு மறிவாய்
பூரணக் கலைகண்டு பயிர்தழையு முயிர்பல
புரந்திடத் தழையுமறிவாய்
புதல்வன்போ லத்திரியின் றசரதன் புதல்வனும்
புவனத்தை யொளிர்விப்பையேல்
நாரணன் அவத்தையோர் மூன்றுமொளிர் விப்பவன்
நல்லமுது சகோரமுண்டால்
ஞானவமு துண்பர்நிதம் யோகியர்க ளென்றுணர்வை
நாளுமுன் றுணைவனுகும்

ஆரணன் பலகோடி யண்டம் படைப்பவனொ
டம்புலி! யாடவாவே
அறிவருள் அயோத்திநகர் செல்விமண வாளனோ
டம்புலி! யாடவாவே. 1

63. ஓர்ந்திடின் உனக்குறு களங்கமது பூமியால்
உற்றுனக் குண்மையின்ரும்
உயிரிறைவன் மாயைசெயல் உற்றதெனத் தோற்றினும்
உண்மையிற் காணவின்ரும்
பேர்ந்திடுங் கலைகளாற் பழுதுனக் கில்லைபோற்
பிரளயஞ் சிருட்டிமுதலாய்
பேதநன வாதியாம் அவத்தையிற் கேடறப்
பிரம மாய்த் தனித்துநிற்பன்
தேர்ந்திடார் முகிலோட நீயோட லெனல்போலத்
திரிகரணச் செயலை யெம்மான்
செயலென்பர் நீயுமிறை வனுமொத்த துன்றுணைச்
செல்வன்பொற் றுணையு மிலையாம்
ஆர்ந்துபிரி வற்றெளிரும் ரகுராம வள்ளலோ
டம்புலி யாடவாவே
அறிவருள் அயோத்திநகர் செல்விமண வாளனோ
டம்புலி யாட வாவே. 2

64. மூவர்முதல் வானவர்க் கேவல்புரி வாயெவரும்
முழுமுதற் கேவல் புரிவர்
முழுக்கலைகள் ஈரெட்டாம் இறைவர்க் கனந்தகலை
முன்னிருந் தறிவதிலையாம்
தேவர்முதற் றேடரியன் உனையடைந் திவ்வுலகர்
செய்வதினி யெச்செயலதோ!
தினகரன் சேர்ந்தமா வாசைபூ ரணைபிரிய
சேனூசல் ஆடுமவனி
சீவர்முதல் உட்புறம் பண்டபகி ரண்டமாய்த்
திறமான சாட்சியாவன்
தெரிவையர்கள் மோகத் தலைந்து கலையற்றவன்
திருமார்பன் ஏகதாரன்

ஆவர்முதல் ஈறற்ற ரகுராம வள்ளலோ
டம்புலீ யாடவாவே
அறிவருள் அயோத்திநகர் செல்விமணவாளனே
டம்புலீ யாடவாவே 3

65. உன்னெளிப் பகலின்றி யிரவுசில காலமாம்
உனையிரவி மின்னலுடுதீ
உயிர்மனங் கண்ணெளி விளக்கிமெய்ஞ் ஞானமாய்
ஓராவணி சதுர்த்தியில்
நின்னெளிகண் டவர்களோ நிரயமுறு பாவராம்
நெடுமாலென் றெந்தவுருவும்
நினைப்பவர்க் கேழ்பவ நிரயமில்லை யெனுமறைகள்
நின்றுமதன் குடையதனுய்
மின்னெளி மணித்தலை யனந்தனே ந் துவகுடை
மீளுமுன் கலைகள் அறிவாய்
மெய்யுணர் வின்பமாய் மேவினேர்க் கெந்நாளு
மீளாத கதியுமாவன்
அன்னையவன் எம்பிரான் ரகுராம வள்ளலோ
டம்புலீ யாடவாவே
அறிவருள் அயோத்திநகர் செவ்விமண வாளனே
டம்புலீ யாடவாவே. 4

66. பேராத தீவினைகள் பேர்த்தருளி யழியாத
பெருவாழ்வு நல்குமொருவன்
பேராயி ரம்பரவும் வானேரு மேனேரும்
பேறுற்ற பெருமையைக்கேள்
வாராத செல்வமுற் றயனீசன் இந்ராதி
வானேர்கள் முனிவர் அரசர்
மாதவர்கள் மறையவர்கள் மன்னர்கள் மங்கையவர்கள்
வாழ்வுபெற் றின்பமுற்றுல்
நாராய ணன்றந்த செல்வமென வுணர்வைநீ
நனவன்றிக் கனவினும்போய்
நாடியேற் போர்க்கவன் நல்காது விட்டிடான்
நம்பினேர்க் கேழ்பிறப்பாம்

ஆராதி நோய்தீர்க்கும் ரகுராம வள்ளலோ
டம்புலி யாடவாவே
அறிவருள் அயோத்திநகர் செல்விமணவாளனோ
டம்புலி யாடவாவே. 5

67. நாவினுற் றூற்றுவர்கள் நல்லோர்கள் அஞ்சவே
நனவன்றிக் கனவுமஃதே
நரகன் சராசந்தன் இரணியன் இராவணன்
நந்துசிசு பால ராேர்
தீவினைகள் தீர்த்தவன் மெய்ப்பதந் தந்தவன்
திரிகரண நன்மைசெய்யாச்
சிலைவேடர் போன்றவரும் பேராத வாழ்வினிற்
சேர்த்துமுள் காத்தவள்ளற்
காவினைவந் தடிபரவ விதுகாறு முற்றநின்
களங்கமற் றிறப்புதீரும்
கருதரிய பேரின்ப வாழ்வுபெற் றுய்வையிதிற்
கடுகளவு மையமில்லை
ஆவினைமுன் காத்தருளும் ரகுராம வள்ளலோ
டம்புலி யாடவாவே
அறிவருள் அயோத்திநகர் செல்விமண வாளனோ
டம்புலி யாடவாவே. 6

68. வேத முறைதவம் செய்தும் வருணனோ
வரும்பி வந்திட வுணர்விலான்
வேலை கொதித்திட விட்ட சரத்தினல்
வெதும்பி வந்ததை யுணர்ந்திடாய்
வாது புரிந்தவர் தம்வலி யொருசுடர்
வலிய வந்திட வெவருமே
வாவி யுடனமர் வெல்ல வரியராய்
மடித்த தொரம்பை யுணர்ந்திடாய்
காத லுறுமவன் அன்னை முலையைப்போய்
கலங்கச் செம்புலற் கிழிக்கவே
காக வசுரனைக் கொல்லத் துரும்புபோய்க்
களைகண் இன்றிகண் தருவதோர்

மாதவனைத்தொழு துய்ய நினைந்துநீ
வருக அம்புலி வருகவே
வாழ்வு தரவல அண்ணல் ரகுபதிதீ
வருக அம்புலி வருகவே. 7

69. நாளு நினைத்திடு அன்பர் துயரற
நடத்து மைந்தொழில் அருளினல்
நாடி யயனரன் உம்பர் இறைஞ்சிட
நலஞ்செய் திடுக்க ணகற்றுவான்
கோளும் பெயர்த்திடுங்குன்ற மெடுத்திடுங்
குறளெ னப்புகுந் குலகெலாம்
கூட வளந்திடும் பள்ளத் தவிசினிற்
குடைந்து விண்வரை நெடியனும்
ஆளும் பதந்தரும் அண்ணல் அறிந்திலே
அகிலம் சுற்றுதல் பயனதாய்
ஆடித் திரிந்தனே பஞ்ஞன் அழிந்திட
அறிவை நல்கினுமெ நல்குவான்
மாளுந் துயர்மனம் இன்பம் பெருகிடும்
வருக அம்புலி வருகவே
வாழ்வு தரவல வள்ளல் ரகுவரன்
வருக அம்புலி வருகவே. 8

70. அண்டம் மாய்த்துயிர்க் குந்தி கொடுத்தவன்
ஆலிற் பள்ளியன் அரவுமேல்
அமர்ந்து நான்முகன் றன்னைப் படைத்தவன்
ஆயத் தந்தவன் உலகெலாம்
உண்ட வாய்மணை அன்னை திறந்தெழு
லோகம் உள்ளிருந் துணர்ந்ததோர்
உயிர்கள் ஊழ்வினைக் குற்ற பயன்பெற
ஓமென் றைந்தொழில் இயற்றுவான்
கொண்ட வேட்கையைத் தந்த பெருமையன்
கூட வந்தவர்க் கபயமாய்க்
கொடுக்க மேகமுன் ளைஞ்சு கரமலர்
கூவி வந்திட அருளினல்

அண்டர் போற்றிடும் ஐயன் அழைத்தனன்
ஆட அம்புலி வருகவே
அகில நாயகன் அன்பு பெருகிட
ஆட அம்புலி வருகவே 9

71. சிந்தக் கண்களில் அருவி யிற்றுளிச்
சீர்முகஞ் சுளித்தி டுவனேல்
சிறந்த மூவர்வ ரயில் குலகுணைச்
சேரத் தடுத்து முயிர்பெறாய்
கந்தனென்றொரு மருகன் உண்டயிற்
காண விட்டுயிர் பிழைத்திடாய்
கருணை காளிதன் றங்கைய வளுடன்
காள கண்டன்வரி லுய்வயோ
சொந்த நண்பனா அருமை பத்தனோர்
தூதன் வந்திடில் உயிர்பெறாய்
துணைவி மாருடன் உலகில் உய்ந்திடச்
சோதி மெய்ப்பொருள் கதியதாய்
அந்த மற்றவன் அடிகள் தஞ்சமென்
றாட அம்புலி வருகவே
அகில நாயகன் அகம கிழ்ந்திட
ஆட அம்புலி வருகவே 10

---

## 8. சிற்றிற் பருவம்

72. கருமா மாயைப் பெருமையினாற்
கான லுலகைப் படைத்துயிர்கள்
கருத்தி லிருந்தே யாவரையும்
கரும வழியில் அசைப்பவனே !
பெருமா தவத்தாற் கோசலைமுன்
பெற்று வளர்க்க வாய்த்தவனே !
பெரியோர் அன்பாற் கட்டுண்டோய் !
பேத மனத்தோர் காணாதோய் ?

அருமா தவத்தோர் ஆய்ந்துணரும்
அறிவே வடிவாய் அமர்ந்தவனே!
ஆயா மனத்தோற் கறிவரியோய்!
அழியா வின்பப் பெருவாழ்வே!
திருமா மறைகள் தினம்பரவும்
தேவே! சிற்றிற் சிதையேலே
செந்நெற் கழனி யயோத்திநகர்
செல்வா! சிற்றிற்சிதையேலே. 1

73. கருக்கு ழியினை யழித்திடுவாய்
கன்மத் துயரை யழித்திடுவாய்
காமப் பகையை யழித்திடுவாய்
காலன் றுயரை யழித்திடுவாய்
இருக்கு முதலாம் வேதங்கள்
இசைத்த வையம் அழித்திடுவாய்
ஈசன் சீவன் உலகமென
வெண்ணும் பேதம் அழித்திடுவாய்
பருக்கு மனவா தனையழிப்பாய்
பங்க யத்தோன் எழுத்தழிப்பாய்
பஞ்சப் ப்ராந்தி யழித்திடுவாய்
பஞ்சப் பேத மழித்திடுவாய்
திருக்கு வடிவே நீயென்ற
தேவே! சிற்றிற் சிதையேலே
செந்நெற் கழனி அயோத்தி நகர்
செல்வா! சிற்றிற் சிதையேலே 2

74. ஆரா வமுதே! என்னுயிரே!
அழியா திருக்கும் மெய்ப்பதமே!
அனந்தா னந்தா! சிற்பொருளே!
அவத்தை மூன்றும் அறிதுரியா!
தீரா வின்பப் பெருவெள்ளத்
தேனே! கருணைத் தடங்கடலே!
தேடா தணையும் பெருஞ்செல்வா!
திருமா மடந்தைத் திருமார்பா!

பேரா திருக்கும் பெருவாழ்வே!
பிரியா திருக்கும் எண்ணுணர்வே!
பிறவிப் பிணிக்குப் பெருமருந்தே!
பேத மறுத்தோர் பேருணர்வே!
தேரா நாயேற் கருள்புரியும்
தேவே! சிற்றிற் சிதையேலே
செந்நெற் கழனி அயோத்திநகர்ச்
செல்வா! சிற்றிற் சிதையேலே.

75. அன்பாம் அடியார் உடல்பொருள்தம்
ஆவி யுண்டான் என்றுரையோம்
அடியார்க் கன்றி மற்றவர்க்கோ
அருளான் எனவே யிசைத்திலமே
தின்பான் சபரி யெச்சிலெனோம்
திருடும் வெண்ணெ யென்கிலமே
தெரியான் மாயன் என்றுரையோம்
தேசங் காலம் இலியென்னோம்
நின்பாற் சித்தம் இலியென்னோம்
நிர்க்கு ணத்தோன் என்றுரையோம்
நீலன் குரவுக் கூத்தென்னோம்
நினைப்பார் பித்தன் என்கிலமே
இன்பா! இறைவா! எம்பெருமான்!
எளியேஞ் சிற்றிற் சிதையேலே
எழுமா டஞ்சூழ் அயோத்திநகர்
எம்மான்! சிற்றிற் சிதையேலே.

76. முன்னம் புரிந்த மாதவத்தால்
முதல்வா! வுன்றன் நினைவளித்தாய்
முத்தர் போற்றும் திருப்பதிகள்
முகந்து நெஞ்சில் இடமளித்தாய்
பின்னம் இல்லா வோருருவாய்
பிறப்பற் றிருந்தும் உன்னருளாற்
பிறந்து வருவாய் அன்பருக்காய்
பேறும் பொருளும் அளித்திடுவாய்

பொன்னம் பலவன் றிருவுருவாய்
போத மளித்துப் பூதலத்திற்
போற்றும் ஆல வாய்வடபால்
புதுவை யானை மலையமர்ந்தாய்
அன்ன வயல்சூழ் அயோத்திநகர்
அரசே சிற்றிற் சிதையேலே
அழியாக் கருணை பொழிமுகிலே
அய்யா சிற்றிற் சிதையேலே 5

77. ஆர்த்தன் றுயரை யழிப்பவனி
அர்த்தாத் திமிடி தீர்ப்பவனி
அரிய ஞானத் தீயதனல்
அழிப்பாய் மூமூட்சு அஞ்ஞானம்
பேர்த்து நீநான் எனும்பேதம்
பிரிவற் றென்றாய் உணர்வின்பாய்
பிரம மொன்றே யெனவுணர்ந்தோர்
பெத்த முத்தி யிலராஞேர்
சேர்த்த முக்க ரணத்தொழிலும்
தீர்ந்து நானற் றுன்செயலாய்
சேயர் பித்தர் பேயர்செயும்
செயலாய் உலகில் விளையாடத்
தீர்த்தா! வருள்வ துன்செயலாம்
சிறியேஞ் சிற்றிற் சிதையேலே
செந்நெற் கழனி அயோத்திநகர்
செல்வா! சிற்றிற் சிதையேலே. 6

78. நந்தா விளக்காய் உடன்மூன்றின்
நடுவாய் இன்பப் பெருவெளியாம்
நானே நீயாம் நீநானும்
நானுஞ்சிவன் உனதஞ்சன்
சிந்தா குலஞ்சேர் யானெனதும்
சேரா திலங்குந் திருவடிக்குத்
தினமும் தூல வுடலடிமைத்
தேகந் தானென் றறிவிழந்தோர்

வெந்தார் துயரில் பிறப்பிறப்பாய்
விதியான் மாளும் விணர்களும்
விதி யிற்கண் டிகழ்ந்திடுவர்
வேதப் பொருளாய் ஆய்ந்துணருஞ்
செந்தா மரைத்தாள் புழுதிபடச்
சிறியேஞ் சிற்றிற் சிதையேலே
செந்நெற் கழனி அயோத்தி நகர்ச்
செல்வா சிற்றிற் சிதையேலே. 7

79. நம்பன் றுயரோ துயர்தந்த
நரகன் தலையோ காளிங்க
நாகத் தலையோ கம்சனோதான்
நரையோ சகடோ திருத்தேரோ
உம்பர் துயரோ ஏழெருதோ
ஊழி காலத் துலகதுவோ
உழையோ கூனி முதுகதுவோ
உண்ணும் பேயின் முலையதுவோ
கம்பக் களிரோ சிவதனுசோ
கன்றோ விளவின் கனியதுவோ
கரனோ மூலப் படையதுவோ
கலியோ அரக்கர் மனையதுவோ !
செம்பொற் கழலாற் சிதைப்பதற்கு
சிறியேஞ் சிற்றிற் சிதையேலே
செந்நெற் கழனி யயோத்திநகர்ச்
செல்வா சிற்றிற் சிதையேலே. 8

80 அருளாம் ஞான பலமான
அரந்தை யற்ற காமாப்தி
அனைத்தும் செய்து முடித்திடுதல்
அடைந்த தடையும் பேறறிவால்
இருளாம் மறைப்பும் சஞ்சிதமும்
எரித்து பிரம ஜகத்துடனே
எரிந்த பிராரத் துவத்தாலே
இன்ப துன்பம் நுகர்வித்து

மருளாம் விட்சே பத்துடனே
மாய சகஜ கன்மஜமும்
வாழ்த்தி யிகழும் பலராலே
மாள வாகா மியகன்மம்
தெருளால் எமையாள் பெருந்தலைவா !
சிறியேஞ் சிற்றிற் சிதையேலே
செந்நெற் கழனி அயோத்திநகர்
செல்வா ! சிற்றிற் சிதையேலே. 9

81. அட்டகுல கிரியேழுங் கடல்சக்ர வாளம்
அம்புவிகள் எழுகதிரோன் திங்கள்மக மேரு
வெட்டவெளி யிலகாமல் அண்டநிறை மூட
மெய்யெனபல் உயிர்பலவாம் இங்களவு கூறி
தொட்டரிய முடியாத விவைசெய்து தாங்கி
சுட்டழித்தல் உன்றொழிலாம் எம்மிறைவ ! நாளும்
சிட்டர்புகழ் ரகுராம சிற்றில்சிதை யேலே
சித்தமிசை குடிதருவோம் சிற்றில்சிதை யேலே.

82. வன்புற்ற வசுரரெனப் புன்றொழிலிற் சேரும்
மண்புகழ்நின் தலமுழுதும் சென்றுபணி வோம்யாம்
அன்புற்ற விதுரர்மனை யைவர்மனை யூண்போல்
அட்டுதரும் அறுசுவை யளித்திடுவம் யாம்போய்
துன்புற்ற வுயிர்பல நினைப்பரவல் போலே
சுத்தமுடன் றொழுதிடுவம் உன்புகழைத் தானே
இன்புற்ற ரகுராம சிற்றில்சிதை யேலே
எங்கண்மனம் குடிதருவம் சிறிறில்சிதை யேலே.
10

---

## 9. சிறுபறைப் பருவம்

83. இருவகைச் சரமசரம் மூவகைச் சாதியாய்
எண்பத்து நான்குலட்ச
எண்யோனி பேதமாய் ஈரிரு பிறப்பதாய்
எழுவகைத் தோற்றமாகி
உருவுற்று மனிதனாய் உலகுமுழு தரசாண்
டுவர்க்கடலி லாணைசெல்ல
ஒருவனாய்ச் செங்கோலை யோச்சினும் விண்ணோர்கள்
உறுதுணைய தாகவந்தும்
வெருவிவந் தெமனுயிர் கவரவந் திடுவனேல்
விடநீவிர் கோடிசொலினும்
விடுவனோ மனைமக்கள் சுற்றமெனச் சந்தைபோற்
வீணுறவு விட்டுநிதமும்
திருவடியை யினியேனும் சேர்ந்துய்மி னென்றுநீ
சிறுபறை முழக்கியருளே
திருவளர் அயோத்திநகர் வைகுந்த வாசனே
சிறுபறை முழக்கியருளே. 1

84. முத்தாபந் தீரமூன் றுடல்தீர வினைதீர
முக்கரணச் செயல்களோய
முனிவுரா கந்தீர அஞ்ஞகுல மற்றொழிய
மோனமுற் றுணர்விலங்க
பொத்தான தேகமுதல் உலகையான் எனதெனும்
பொய்யான வத்தியாசம்
போகாமல் ஓர்நாளும் உண்மையுணர் வுதியாது
புண்ணியப் புஞ்ச முற்றி
வித்தான இருவினைச் சமமாக அருளினால்
விடுபெறு மாசைமுற்றி
மெய்யுலகு முக்காலும் இலதெனச் சுருதியான்
மெய்க்குருவின் அருளினாலே
சித்தான மெய்யுணர்வில் ஆரோபம் அற்றொழியச்
சிறுபறை முழக்கியருளே
திருவளர் அயோத்திநகர் வைகுந்த வாசனே
சிறுபறை முழக்கியருளே. 2

85. அண்டமுழு தரசாண்டும் அறுபத்து நான்குகலை
யாய்ந்துலகை வாயடைத்தும்
அஞ்சலென யாவர்க்கும் அருணெறி யுரைத்திடினும்
அட்டாங்க யோகமுற்றும்
மண்டலஞ் சுற்றிவலம் வந்திடினும் ஏகனாய்
வாய்பேசல் மோனமுற்றும்
மந்திரம் பலகோடி யோதிடினும் நீரழன்
மத்தியிற் றவமுடித்தும்
கொண்டவிர தம்பல முடித்துமெய்த் துறவியாய்க்
குகையிற் றனித்திருந்தும்
கோபாதி தீர்ந்துகாய் கிழங்குசரு குண்டுமனக்
குகையினிற் றன்னையுணரார்
தெண்டிரை சூழுலகில் உய்வதரி தென்றுநீ
சிறுபறை முழக்கியருளே
திருவளர் அயோத்திநகர் வைகுந்த வாசனே
சிறுபறை முழக்கியருளே. 3

86. ஒளிதூங்கு மணிமாடத் திருநகரிற் றெய்வமறை
யோவா தொலித்தவாபோல்
உலவிவரு மங்கையர்கள் காற்சிலம் பொலிகடலின்
ஒலிமிக முழங்குதல்போல்
களிதூங்கு வானோர்கள் அரியரியென் றூடிநிதம்
கைகூப்பி யார்த்தவொலிபோல்
கரிபுரவி பந்தியொலி காவலர்செய் நாணொலி
கனத்திடி முழங்குதல்போல்
நளிதூங்கு சரயு நதி திரைக்கரத் தடிவருட
நன்கெழும் பேரொலிகள்போல்
நாற்புரந் தெய்வதளி மங்கலத் தொலியுடன்
ஞானிகள் அமுதமொழிபோல்
தெளிதூங்கு நவமணி யொளிர்த்தொடி கரத்தினாற்
சிறுபறை முழக்கியருளே
திருவளர் அயோத்திநகர் வைகுந்த வாசனே
சிறுபறை முழக்கியருளே. 4

87. இதமா யெழுந்திரைப் பாலாழி யாமனத்
தெழுநினை வனந்தனுமேல்
இருந்தொளிருமானந்த மாந்தெய்வம் ஐம்புலன்
இதயத் தொடுங்கறவமாம்
பதமா யிலங்குமென துருவினி லிவ்வுலகம்
பல்கா லுதித்தொடுங்கும்
பழுதினிற் பாம்பெனப் பகுத்தறிவதேயறிவு
பரபத்தி பரஞானமே
நிதமோதன் மறைகளாம் சாந்தமனந் தாரமாம்
நினைவறத் தனதுவடிவாம்
நிகழுலகிற் சச்சிதானந்தமே யுண்மையாம்
நீங்குமிருள் நாமரூபம்
திதமா யறிந்திடுதல் முக்காலும் உண்மையெனச்
சிறுபறை முழக்கியருளே
திருவளர் அயோத்திநகர் வைகுந்த வாசனே
சிறுபறை முழக்கியருளே. 5

88. மறைமொழியுந் தத்வமசி யெனுமுப் பதத்தினுள்
வாச்சியமி லட்சயந்தான்
மாயையா பாசபிரம் மஞ்சேர வாச்சியம்
மகிழ்பிரமம் லட்சியந்தான்
குறைமனம் ஆபாசன் கூடத்தன் வாச்சியம்
கூடத்த னேலட்சயம்
கூடத்த பிரமங்கள் குடமடவிண் போலவே
கூடியசி பதமதொன்றும்
நிறைமொழிமெய்ஞ் ஞானிகள் மூவர்முதல் மறையெலாம்
நிகழ்த்திட வனுபவத்தால்
நித்தம் சுழுத்திதனை யாய்ந்துணர்ந் தஞ்ஞானம்
நீக்கியொன் றாகவல்லீர்
சிறையெனும் ஏழ்பிறப் பின்றெழுந் துய்வரெனச்
சிறுபறை முழக்கியருளே
திருவளர் அயோத்திநகர்வைகுந்த வாசனே
சிறுபறை முழக்கியருளே. 6

89. பெருத்தவைம் பூதபஞ் சீகரண முலையாது
பேரண்டம் பேர்ந்திடாமற்
பெரும்புறக் கடல்சக்ர வாளகிரி வீயாது
பேர்ந்துமீன் உதிர்ந்திடாமல்
உருத்திரன் அயன்முதலோர் உள்ளயர்ந் தோடாமல்
ஒளிகணிலை பேர்ந்திடாமல்
உம்பர்பதம் மாருமல் உரகர்பதம் மாருமல்
உணர்வுடைய ஞானிநெஞ்சம்
வருத்தமற யோகியர்கள் பேரின்பம் மாருமன்
மலராள் அயர்ந்திடாமல்
மன்னவன் றசரதன் ருய்மூவர் தம்பியர்
மனமயர்ந் தோடிடாமல்
திருத்துளவ மார்பனே செங்கைமலர் நோவாது
சிறுபறை முழக்கியருளே
திருவளர் அயோத்திநகர் வைகுந்த வாசனே. 7
சிறுபறை முழக்கியருளே.

90. இருக்குமுத லான கலை நால்வர்தமிழ் வாய்மொழியும்
எக்கலையுங் கற்றபுலவீர்
இருநிதிக் கொடையுதவ வாங்கவரு விரென
விசைத்தகொடை முரசமெனவும்
உருக்கமுடன் பெற்றதிரு சனகன் பெருஞ்செல்வி
உலகெலாம் மகிழமுன்னம்
உகந்துமணஞ் செய்போ தொலித்நமண முரசமும்
உம்பருளம் மகிழ்வெய்தவே
பெருக்கமுறு சேனையிற் போர்வேள்வி கண்டிடப்
பேரா தெழுந்தவிரர்
பெருமகிழ்வு கொளகின்ற வெற்றிமுர சார்த்திடும்
பேரொலி முழக்கமென்ன
செருக்கமும் முரசொலிகள் நின்னகர் முழக்கெனச்
சிறுபறை முழக்கியருளே
திருவளர் அயோத்திநகர் வைகுந்த வாசனே
சிறுபறை முழக்கியருளே. 8

91. நலமுறு பலகலை நல்கி யுளத்துறு நறுஞ்சுவையே
நடாத்தி யுயிர்களைக் கரும வழியினில் நடித்திடுவோய்
உலகினில் உறுதுயர் ஒழித்திட வருமொரு தெய்வமதே
உலாவும் உயிர்க்குயிர் உணர்வுக் குணர்வளித்
தொளிரொளியே
விலகிடப் பிறப்பினி விரும்பினர் குறிச மயம்பலவே
விநோதம் எனவிடுத்துளத்தில் அறிவுரு வுணர்ந்திடுவார்
அலமுறு துயரற முதல்வன் முழக்குக சிறுபறையே
அயோத்தி புரிச்சிறு குழகன் முழக்குக சிறுபறையே. 9

92. பெருகு நறைகண்டு முக்கனி பழுத்த பழரசமே
பிராண னெனப்பிடி பெயர்த்தடி வைத்திடு மிளவன்னமே
உருகிட கருவரை கொஞ்சிவந்து ரைத்திடு மஞ்சுகமே
உயேனெ னக்கருள் புரியென வுகந்துரை புகன்றிடுவோய்
திருச னகன்றன் திரும களடியிற் பணிந்தெழுந்தே
திரோத மனமற் றிடவுச் சியில் வைத்திடு கரமலரான்
அருள்பச் சைப்புய சயிலன் முழக்குக சிறுபறையே
அயோத்தி புரிச்சிறு குழகன் முழக்குக சிறுபறையே. 10

## 10. சிறுதேர்ப் பருவம்

93. தூதுற்ற வனுமந்தன் கடல்தாண்டி லங்கையிற்
சோலைசூழ் அசோகுபுக்கான்
துணையின்றிச் செல்வியுயிர் விடத்துணிதல் கண்டவன்
சொல்ராம ராமவெனவே
காதுற்ற போதுயிர் மீண்டதைக் கண்டனன்
கைத்தலைதம் மீதிருத்திக்
காகுத்தன் தூதனும் கண்டென்னை யஞ்சற்க
கணையாழி கொண்டுவந்தேன்
வாதுற்ற போதுநீர் மலர்மாலை கட்டுண்ட
மருமங்கள் சொல்லவந்தேன்
வருவீரெற் கொண்டுபோய் வள்ளலிடம் வைப்பனெனும்
மாருதிக் கேழ்பிறப்பின்
சேதுற்ற மெய்பொருள் ஆகிவிளை யாடுவோய்
சிறுதேர் உருட்டியருளே
சிவன்முதல் மூவர்க்கும் யாவர்க்குந் தலைவனே
சிறுதேர் உருட்டியருளே. 1

94. மலையேந்து தோளினன் களிறேந்து மார்பினன்
வன்கதிர் புகாதநகரோன்
வான்வந்து தாள்பணியும் மைந்தரைப் பெற்றவன்
மதியுலவும் முனிவர் போற்றும்
கலையேந்து வாயினன் நவகோளைப் படியாக்கிக்
காலால் நடந்த தவிசோன்
கதிருலாம் புவியெலாந் தன்வசங் கொண்டவன்
கடல்போற் பறந்த படையோன்
புலையேந்து நெஞ்சினுற் போரேந்தி வந்தவன்
பொருபடை யிழந்தகையான்
புவிநோக்கி நின்றுனைப் புறஞ்செலாத் தகவினுற்
போநாளை வாவென்றுமுன்
சிலையேந்தி நின்றருட் கடல்பொங்கு மெம்பிரான்
சிறுதேர் உருட்டி யருளே
சிவன்முதல் மூவர்க்கும் யாவர்க்குந் தலைவனே
சிறுதேர் உருட்டி யருளே. 2

95. பிறப்பென்னும் ஆழிதனில் உணர்வென்னு மணையான
பெருமான் ! உனக்குமணையாய்
பெருங்கடலை வானோர்கள் வானர ராய்மலைகள்
பேர்த்துவந் திட்டனுடத்தல்
இறப்பென்னும் ஆழியில் இனிப்பிறந் துழலாமல்
இருமைபுகழ் வீடடைந்தார்
இடைவிடா மாரிநாள் எங்குமுறை நீர்போல
எவ்வுயிரும் உய்ய வருநாள்
மறப்பென்னும் அஞ்ஞானல் மதியற்ற நாயினேன்
வந்தரு ளடைந்திடாமல்
வற்றுநாள் நீர்தேடல் போலுனைத் தஞ்சமென
வந்தனன் அருளை நல்காய்
சிறப்பென்னும் பேரின்பம் அன்பர்க் களித்தவன் !
சிறுதேர் உருட்டியருளே
சிவன்முதல் மூவர்க்கும் யாவர்க்கந் தலைவனே
சிறுதேர் உருட்டி யருளே. 3

96. பண்ணுலாம் மொழியினள் வந்தென்னை யாளெனப்
பரனை நினைந் துருகுகண்ணீர்
பட்டொழியப் படைராவ ணன்மூலப் படையேவப்
பறந்தலையில் ஊழியென்ன
விண்ணுலாம் சேனைபல எண்ணற்று முறையற்று
விதம்பல முகங்களூற்று
வெந்தழற் கண்பொறிகண் டஞ்சிமிக வானரர்
வெந்நிடச் சாம்பனனுமான்
எண்ணிலாப் பெருமையால் எவ்வுருவும் தானய்
இலங்கமெய்ஞ் ஞானிகள்போல்
இயற்கையுரு ராமனென் றிகலுற்ற சேனைகள்
எதிர்த்தமர் புரிந்துமாயத்
தெண்ணிலா முகத்தினய் செய்திட்ட மாயைபோற்
சிறுதேர் உருட்டியருளே
சிவன்முதல் மூவர்க்கும் யாவர்க்குந் தலைவனே
சிறுதேர் உருட்டியருளே. 4

97. மானுலாங் கண்ணினுர் மொழிகேட்ட மாந்தரோ
மண்ணினிற் பழியடைந்தார்
வாய்மொழியும் நூற்பொருளும் யாவுமுணர் அண்ணலே
மலராண் மொழிக்கிரங்கிக்
கானுலாம் மான்பினே சென்றதம் மான்தவமோ
காதலான் மாந்தர் இயல்பைக்
காட்டுமுன் றகவதோ வரக்கர்செய் பாவமோ
கான்செய்த முனிவர்தவமோ
வானுலாம் அயனுதி தேவர்கள் பாற்கடலில்
வந்துனேப் போற்றுமருளோ
மாயைசெய் வல்லபமோ சனகாதி சாபமோ
மதித்தறி யாதசெயல்போல்
தேனுலாம் திருத்துளவ தாரணியும் மார்பனே
சிறுதேர் உருட்டியருளே
சிவன்முதல் மூவர்க்கும் யாவர்க்குந் தலைவனே
சிறுதேர் உருட்டியருளே 5

98. வழுமனவன் வாலியுயிர் மாயசுக் ரீவர்க்கு
வாழகிட் கிந்தைதருவோய்
வழித்துணைக் குகன்விருந் துண்டுபிறப் பாழியை
மாற்றநதி யோடமூர்ந்தான்
முழுமனத் தன்பினுற் சுவைபார்த்த கனியுண்டு
முத்திசப ரிக்களித்தோய் !
முடியிலிரு கைசேர்த்து மெய்புளகக் கண்சோர
முதல்வனே அபயமென்னத்
தொழுமன விபீடணர்க் கிலங்கையைத் தம்பியாற்
சுடர்மௌலி சூட்டிவைத்தாய்
சொர்க்கரத மேறிரா வணன்றலைகள் பத்துதிரத்
தொந்தமிட் டலகையாடச்
செழுமலர் வாகைபுனே யெம்பிரான் அருளினுற்
சிறுதேர் உருட்டி யருளே
தேவர்க்கும் தேடரிய மூவர்க்கும் ஒருசெல்வ
சிறுதேர் உருட்டி யருளே. 6

'99. உய்யயுகம் நான்கிலும் கபிலர்தத் தாதிரையர்
ஒளிதரு வியாச முனிவன்
உணர்வுதரு சங்கரன் வான்மீகி முதலினோர்
ஓதினர்கள் தெய்வமறையால்
மெய்யுணர்ந் தாழ்வார்கள் ஆண்டாண் முதற்பலர்
வேதந் தமிழ்ப்பாடினர்
விருந்தாக முத்தமிழ்ச் சங்கப் பெரும்புலவர்
விளம்பிட நவரசத்தால்
ஐயநின் சரிதத்தைக் கம்பனுற் பாடநன்(கு)
அவைமலரின் வண்டெனப்போய்
ஆய்ந்திடப் பல்சமயம் பாடிமெய் யன்பினுற்
அடியிணைக் கணியமுந்நாள்
செய்யதமிழ் மாலையாய் நாயேன்சொல் ஏற்றவன் !
சிறுதேர் உருட்டி யருளே
சிவன்முதல் மூவாராய் யாவர்க்குந் தலைவனே
சிறுதேர் உருட்டி யருளே 7

100. போகபா சந்தீர மெய்யன்ப ருக்கருளிப்
பொன்றுத வாழ்வளிப்போய்
பொன்றுடற் குருதியெழ விந்ரசித் தினையோன்செய்
போர்களத் தரக்கர்மாய
நாகபா சத்திருவர் கட்டுணக் கருடனல்
நாகமற் றமரின்மோத
நடந்திலர் இமைத்தவர்கள் வாள்விட்டகையினர்
நறுங்குஞ் சவிழ்ந்து நின்றோர்
நோகவாள் எய்யா தெதிர்த்தாரை நூறவே
நோக்கிவந் தமரர்வாழ்த்த
நூறினதம் படையெழவும் கைகேயி பரதனும்
நுர்தாதைக் குரிமை கேட்டோய்
தேகபா சம்முருள இருவினைகள் சேர்ந்துருள
சிறுதேர் உருட்டியருளே
சிவன்முதல் மூவராய் யாவர்க்குந் தலைவனே
சிறுதேர் உருட்டி யருளே. 8

101. பொங்காத ரத்தினொடு போற்றவுன தாலயம்
புக்கிலாம் பொறிவிளக்காம்
புலனின்ப வர்ச்சனைசெய் தன்புருகு கண்ணீருண்
பொன்மேனிக் கபிடேகமாம்
வெங்காத றீர்ஞானி வெம்பசியன் உண்பதே
விருப்புற் றுனக்கமுதமாம்
மெய்க்கனியும் மலர்மாலை சடகோபன் முதலான
மெய்யன்பர் வாய்மொழியதாம்
மங்காத வுன்னருண் மயல்தீர்த்து நாயேர்க்கும்
வாழமெய்யுணர்வளித்தாய்
மகிழ்ந்துபொற் சிவிகையில் நாயேற்று பான்மைபோல்
வாழ்வித்த துன்றனருளே
சிங்காதனத்தேறி யுலகெலாம் காப்பவன் !
சிறுதேர் உருட்டியருளே
சிவன்முதல் மூவராய் யாவர்க்குந் தலைவனே
சிறுதேர் உருட்டி யருளே. 9

102. நான்மறைகள் வாழமெய் யன்பருள நீங்காமல்
நல்லறிவு வாழவுலகில்
நற்செயல் வாழ்வருள் வாழவறம் வாழவான்
நலம்பெறப் பெய்துவாழ
கோன்முறைக் கோலோச்சிக் குடிவளம் பெருகிடக்
குற்றமற் றின்பம்வாழ
குலத்தினல் உயர்வெனும் குற்றமற நாளுநற்
குணம் பெற்று மக்கள்வாழ
தான்மறந் தேழ்பிறப் பெந்நாளு மில்லெனத்
தனையறிந் துணர்வு வாழத்
தமமாயை தூளாக நெஞ்சஞ் சமாதியிற்
றற்பதத் தின்பம்வாழ
தேன்மலர் வாகைபுனை திருவருட் செல்வனே
சிறுதேர் உருட்டி யருளே
சிவன்முதல் மூவராய் யாவர்க்குந் தலைவனே
சிறுதேர் உருட்டியருளே. 10

---




# பிழையும் திருத்தமும்

---

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 16 | 3 | அணர்கருள் | அணர்க்கருள் |
| 20 | 30 | மென்றெ | மென்றே |
| 21 | 26 | ———— | கொட்டுகசப்பாணி |
| 24 | 3 | மனர | மரை |
| 28 | 29 | வென் | வென |
| 30 | 27 | வாவி | வாலி |
| 36 | 25 | சுடர் | கூர் |
| 37 | 3 | ரகுபததீ | ரகுபதீ |
| 9 | 19 | தான்மறை | நான்மறை |
| 46 | 7 | பழுது | பழுதை |
| 47 | 27 | கொள | கொள் |
| 47 | 29 | செருக்க | செருக்கு |

---

---

ஜோதி பிரிண்டர்ஸ், திருச்சி-2. (போன்: 5416)